வேதாந்தம்

Guhananda வழிநூல்கள்

ஸ்ரீ மனீஷா பஞ்சரத்நம்

# SRI MANEESHA PANCHAKAM

of

Sri Adi Sankaracharya

With Commentary in Tamil

By

Brahmasri N. Subramania Iyer Avl.,

With a Foreword by

Brahmasri Kasi Krishna Sastrigal





SRI GUHANANDA [redacted],
ROYAPETTAH, [redacted]DRAS.

மண்டலி வெளியீடு—10



॥ श्रीः ॥

॥ ब्रह्मविदाप्नोति परम् ॥

# श्रीमनीषापञ्चकम् ।

# ஸ்ரீமனீஷா பஞ்சகம்

(மூலமும்)

ஸ்ரீகுஹாநந்தமண்டலியின் ஸ்தாபகர்

பிரஹ்மஸ்ரீ, அருட்கவி, ந. சுப்ரமணிய அய்யர்

அவர்களாலியற்றப்பட்ட

இலகுவிவரணம்

என்னும் தமிழ் விருத்தியுரையும்.



(இரண்டாம் பதிப்பு)

ஸ்ரீகுஹாநந்த மண்டலீ

சென்னை.

1941



[விலை அணா 10

10-3

# முகவுரை.

भगवत्पूज्यपादानां मनीषापञ्चकस्य यत् ।
व्याख्यानं भाषया सम्यक् कृतं सूक्ष्मार्थबोधकम् ॥
ब्रह्मविद्याविमर्शिन्याः सभायाः स्थापकैः सदा ।
अध्यक्षैश्च गुणश्रेष्ठैः सुब्रह्मण्यमहाशयैः ॥
आद्यन्तमवलोक्यैतदुचितार्थमनोहरम् ।
उपोद्घातकथारम्यमतीव मुदितोऽस्म्यहम् ॥
देववाणीरसास्वादयोगभङ्गाकुलात्मनाम् ।
मुमुक्षूणां द्राविडानामिदं स्यादुपकारकम् ॥
अद्वैतमतसिद्धान्तबोधनात्सरलैः पदैः ।
जीवन्मुक्तजनानां च लक्षणादिनिरूपणात् ॥

ஸ்ரீமத்பகவத்பூஜ்யபாதாள் திருவாய்மலர்ந்தருளிய ஆயிரக்கணக்கான அத்வைதஸம்ஸ்கிருத நூல்களில் "மநீஷாபஞ்சக" மென்பது முக்கியமான ஒரு சிறுநூல். ஐந்து ஶ்லோகங்களடங்கிய இந்நூலினழகையும், அகாதமான ஆசயத்தையும் யாராலும் சொல்லி அறிவிக்கவியலாது.

இந்நூலில், (1) "दृश्यं सर्वमनात्मा स्याद्दृगेवात्माऽविकारिणी— பார்க்கப்பட்டவையெல்லாம் அனாத்மா. பார்க்கிறவஸ்து ஆத்மா. அந்த ஆத்மாதான் நான்" என்கிற திருடமான ஆத்மானுபவம் வந்த பிரஹ்மவித்வரர்களுக்குத்தான் ஜாதிபேதாதிகளில்லை. (2) "मायामात्रमिदं द्वैतमद्वैतं परमार्थतः— இந்தத்துவைதப் பிரபஞ்சமெல்லாம் பொய்யே. அத்வைதமான

ஆத்மாவொன்றுதான் மெய்." (3) பிரஹ்மநிஷ்டரான குருவினுபதேசத்தாலும் நிரந்தரமனன நிதித்யாஸன அப்பியாசத்தாலும் உத்தமாதிகாரி ஆத்மஸாக்ஷாத்காரத்தை யடைந்து ஜீவன்முக்தனாகின்றான். (4) "देहात्मज्ञानवज्ज्ञानं देहात्मज्ञानबाधकम् । आत्मन्येव भवेद्यस्य स नेच्छन्नपि मुच्यते ॥" சரீரத்தில் ஸ்வபாவமாய் ஏற்பட்டிருக்கும் "நான்" என்ற ஞானத்தைப் போலொத்த திருடமான ஆத்மானுபவத்தால் பிரஹ்மானந்தஸ்வரூபியாயிருக்கும் ஜீவன் முக்தன் யாரானாலும் சரி, அவன் தேவேந்திராதிகளாலும் பூஜிக்கத்தகுந்தவனே. (5) "பிரஹ்மானந்தத்தின் லேசலேசமே தேவராஜாதிகளுடைய ஆனந்தம்" என்பதான அனேக அத்வைதரஹஸ்யங்கள் அடங்கியுள்ளன. இவ்விதமான ரஹஸ்யார்த்தங்களைச் சற்குருமூலமாக அறிந்துகொள்ளாத சில ஜனங்கள் இந்நூலிலிருக்கும் "चण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम அவன் பறையனாகட்டும், பிராஹ்மணனாகட்டும், குருவே அவன் என்பது என் கருத்து," என்கிற பதங்களை ஆதாரமாகவைத்துக்கொண்டு "அத்வைதிகளுக்கு ஜாதிபேதங் கிடையாது, வர்ணாஸ்ரமாசாரம் வேண்டியதில்லை, எங்கேயும் சாப்பிடலாம், யாரையும் குருவாக அடையலாம். என்பது பகவத்பாதாளுக்கும் சம்மதம் தான்." என்று சொல்லுகிறார்கள். அவர்கள் அபிப்பிராயம் சரியல்ல. ஏனென்றால்—அந்தப் பதங்களின் முன்னிருக்கும் "दृढप्रज्ञा हि यस्यास्ति चेत्" "யாருக்காவலும் திருடமான ஆத்மானுபவமிருக்குமேயானால்" என்கிற பதங்கள் அவர்களபிப்பிராயத்திற்கு விருத்தமாயிருக்கின்றன. இந்தப் பதங்களை யோஜிக்கும் பொழுது, ஏற்படும் விஷயம் யாதெனில்,

"ब्रह्मात्मनोः शोधितयोरेकभावावागाहिनी ।
निर्विकल्पा च चिन्मात्रा वृत्तिः प्रज्ञेति कथ्यते ॥

यस्य स्थिता भवेत्प्रज्ञा यस्यानन्दो निरन्तरः ।
प्रपञ्चो विस्मृतप्रायः स जीवन्मुक्त इष्यते ॥"

எப்பொழுதும் அகண்டானந்த ஸாக்ஷாத்காரத்தால் பிரபஞ்சஞானமே இல்லாமல் "असंसक्तिः पदार्थाभावनि" என்ற ஐந்தாவது ஆறுவது பூமிகைகளில் நிர்விகல்பகஸமாதியிலிருக்கும் ஜீவன்முக்தர்கள் தான் இங்கே "திருடபிரக்ஞர்" என்பதால் சொல்லப்பட்டிருக்கிறார்களென்பதே. இந்த பூமிகைகளில் இருப்பவர்களைக் குறித்து ஞானவாசிஷ்டத்திலும், பகவத்கீதையிலும், ஆத்மவித்யா விலாசத்திலும் இவ்விதமே சொல்லப்பட்டிருக்கின்றது.

पञ्चमीं भूमिकामेत्य सुषुप्तिपदनामिकाम् ।
शान्ताशेषविशेषांशस्तिष्ठत्यद्वैतमात्रके ॥

षष्ठीं गाढसुषुप्त्याख्यां क्रमात्पतति भूमिकाम् ।
यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ॥

यस्मिन्स्थितो न दुःखेन गुरुणाऽपि विचाल्यते ।

पश्यति किमपि न रूपं न वदति न शृणोति किंचिदपि वचनम् ।
तिष्ठति निरुपमभूमनि निष्ठामवलम्ब्य काष्ठवद्योगी ॥

(இதன் கருத்து) இவர்களுக்கு பிரஹ்மானந்தத்தின் உறுதி பெறுவதின் நிமித்தம் சரீராதி பிரபஞ்சக்ஞானமில்லாமையால், ஆயுதம் முதலியவைகளினாலுங் கூட துக்கமேற்படாது. இந்நிலைமைக்கு வந்த ஜீவன்முக்தர்களுக்குத்தான் ஜாதிபேதாதிகள் கிடையாதென்று பகவத்பூஜ்யபாதாளின் கருத்து. நாலாவது பூமிகையில் வந்த பிரஹ்மவித்துக்களுக்குப் பிரபஞ்சவிளக்கமும், சிஷ்யோபதேசாதி வியவஹாரங்களும், வர்ணாஶ்ரமாதிவிசாரமும் இருப்பதாக

"शास्त्रेण नश्येत्परमार्थदृष्टिः कार्यक्षमं नश्यति चापरोक्षात् ।
प्रारब्धनाशात्प्रतिभासनाशः एवं त्रिधा नश्यति चात्ममाया ॥"

சாஸ்திர ஞானத்தால் பிரபஞ்சம் சத்தியமென்ற புத்தியும், ஆத்மஸாக்ஷாத்காரத்தால் சுகதுக்காதிகளிலிருந்து சந்தோஷஸந்தாபாதிகளும், பிராரப்த நாசத்தால் பிரபஞ்சத்தோற்றமும் நசிக்கின்றனவென்பது, மேற்படி சுருதிவாக்கியத்தால் தெரியவருகிறது. அதனால்தான் பிரஹ்மவித்தான நமது பகவத்பூஜ்யபாதாள் கூட சண்டாளவேஷதாரியான விஶ்வநாதரை வழியில் பார்த்து வர்ணாஶ்ரமாசாரத்தை ரக்ஷிப்பதின் பொருட்டு அவரை விலகிப்போகச் சொன்னார்கள். இதனால் பிரஹ்மவித்துக்களானாலும் சரீராதிகளில் "நான், எனது" என்ற எண்ணமிருக்கிறவரையில் வர்ணாஶ்ரமாசாராதிகளை அனுசரிக்கவேண்டுமென்பதே பகவத்பூஜ்யபாதாளின் கருத்தென்று தெரிகிறது. அத்வைதமதத்தில் பாரமார்த்திகம், வியாவஹாரிகம், பிராதிபாஸிகமென்று மூன்று அவஸ்தைகளிருக்கின்றன." "यत्र त्वस्य सर्वमात्मैवाभूत् । अशरीरं वा वसन्तं न प्रियाप्रिये स्पृशतः । सत्यस्य सत्यं । प्राणा वै सत्यम् । तेषामेष सत्यम् ।" என்பனவாதிஶ்ருதிகளால் பிரபஞ்சபானமேயில்லாமல் எப்பொழுதும் பிரஹ்மானந்தத்திலிருக்குமவஸ்தையே பாரமார்த்திகாவஸ்தை. இதிலிருப்பவர்களுக்குத்தான் ஜாதி பேதாதிகளொன்றுங்கிடையாது. ஆத்மஸாக்ஷாத்காரம் வரும்வரையிலுள்ள அவஸ்தை வியாவஹாரிகாவஸ்தையாம். இதிலிருப்பவர்களுக்கு,

"देहात्मप्रत्ययो यद्वत्प्रमाणत्वेन कल्पितः ।
लौकिकं तद्वदेवेदं प्रमाणं त्वात्मनिश्चयात् ॥"

என்னும் பிரமாணத்தின்படி வர்ணாஸ்ரமாசார நியமங்களெல்லாம் உண்டு. ஸ்வப்னதியவஸ்தை பிராதிபாஸிகாவஸ்தையாகும். இந்த வியவஸ்தைகளை அறிந்து கொள்ளாமல் எவன் இவற்றை மீறி,

"अज्ञस्यार्धप्रबुद्धस्य सर्वं ब्रह्मेति यो वदेत् ।
महानरकजालेषु स तेन विनियोजितः ॥"

என்றபடி "எல்லாம் பிரஹ்மந்தானென்று எவன் ஸிஷ்யர்களுக்கு உபதேசம் செய்கிறானோ, அவன் அந்த ஸிஷ்யர்களைப் பெரிய நரகத்தில் தள்ளிவிடுகிறான். ஏனென்றால் அந்த ஸிஷ்யர்கள் "संध्यावन्दनवेलायां मुक्तोऽहमिति मन्यते । खण्ड लड्डुकदाने तु दण्डमादाय धावति ॥" என்கிறபடி வேதாந்தத்தை தன்னிஷ்டப்படி உபயோகித்துக் கெட்டுப்போகிறார்கள். அதனால் தான் மகாபாரதத்தில் அனேகதர்மங்களைக் கேட்டபிறகு ஆத்மவித்தையை உபதேசிக்கவேண்டுமென்று திருதராஷ்டிரமகாராஜா விதுரரைக்கேட்க, "शूद्रयोनावहं जातः" நான் சூத்திரயோனியில் பிறந்தவனானகையால் ஆத்மானுபவமிருந்தபோதிலும் எனக்கு அதைத் தங்களுக்குபதேசிக்க அதிகாரமில்லையென்று சொல்லி விதுரர் ஸனத்ஸுஜாதரை வரவழைத்து ஆத்மவித்தையை உபதேசிக்கச்செய்தார். இத்தகைய அனேக அத்வைதமதரஹஸ்யங்களும், அகாதமான ஆதிசங்கரபகவத்பாதாளின் ஆசயங்களும் அடங்கியிருக்கும் "மநீஷாபஞ்சக" மென்னுமிந்நூலிற்குச் சரியான பாஷாவிவரணமெழுதுவது எல்லாராலும் சாத்தியமான காரியமல்ல. இந்நூலில் பகவத்பாதாள் நிறைத்துவைத்திருக்கும் அத்வைத ஸித்தாந்தாம்ருதத்தைத் தேவபாஷாபரிசயமில்லாத முமுக்ஷு ஜனங்களும் உண்டு கிருதார்த்தர்களாகவேண்டுமென்கிற எண்ணங்கொண்டு, அருட்கவி, பிரஹ்மஸ்ரீ N. சுப்பிரமணிய

அய்யரவர்கள் இந்நூலுக்கு லகுவிவரண மென்னும் விருத்தியுரை எழுதியிருக்கிறார்கள். நான் இதை முழுதும் வாசித்துப் பார்த்தேன். இது சரளங்களான பதங்களாலும் அவதாரிகைகளாலும் பகவத்பூஜ்யபாதாளுடைய ஆசயங்களை எல்லோருக்கும் தெளிவாக வெளியிடுகின்றது. ஆகையால் இந்த லகுவிவரணம் நம் தேசத்து முமுக்ஷு ஜனங்களுக்கு ரொம்பவும் உபகாரத்தைச் செய்யுமென்று நம்புகிறேன். தவிறவும், நம் அருட்கவி, பிரஹ்மஸ்ரீ சுப்பிரமணிய அய்யரவர்கள் மதராசில், இராயப்பேட்டையில் பிரஹ்மவித்யாவிமர்சினி யென்ற ஸபையை ஸ்தாபித்து அதற்கு அத்யக்ஷராக இருந்துகொண்டு அனேகபக்தஜனங்களுக்கும், முமுக்ஷுக்களுக்கும் அவர்களதிகாரத்திற்குத் தக்கபடி ஸ்ரீவித்தையையும், ஆத்மவித்தையையும் உபதேசித்துவருவதுடன் அவ்விடம் வரும் பெரியோர்களையும் அச்சபையிலுபதேசிக்கச் சொல்லி ஆதரிக்கிறார்கள். குருதத்வவிமர்சம், ஸபர்யாபத்ததி வாஸனாவிமர்சம் முதலிய அனேகநூல்கள் இவர்களால் இயற்றப்பட்டு இச்சபையோர் மூலமாக அச்சிடப்பட்டு வெளிவந்திருக்கின்றன. இவர்களிடமிருக்கும் அபூர்வமான வொரு குணம் என்னவென்றால் ஸ்ரீவித்யையும் ஆத்மவித்யையும் ஒன்றேயெனச் சமரசப்படுத்தி உபதேசிப்பதுடன், பரமசாந்தராகவும் இருந்து, அவைகளை அனுபவத்திலும் கொண்டுவந்திருப்பதுதான். இவருடைய பரோபகாரசிந்தனை மெச்சத்தக்கதே. பகவான் விஸ்வநாதர் இவருக்கு மேலும் மேலும் உத்சாஹத்தையும் சிரேயஸ்ஸையும் கொடுப்பாராக. விஸ்வநாதர் சகாயம்.

ஸ்ரீ கீதாஸ்வாமிமடம்.
காசி. 10-9-1941.

काशी· कृष्णशास्त्री

# மநீஷாபஞ்சகம்

## பூமிகை.

மநீஷாபஞ்சகம் என்னும் இந்நூல் மநீஷை, மநீஷை யென்பதை மகுடமாகவுடைய ஐந்து ஸ்லோகங்களாலாக் கப்பட்ட ஒரு சிறுநூலேயாகும். இது ஸ்ரீசங்கரபகவத் பாதாசார்யஸ்வாமிகளால் இயற்றப்பட்டதென்பது உலகப் பிரஸித்தமே. ஆயினும், அவர், எப்போது, எங்கே, எந்த ஸந்தர்ப்பத்தில் இதை யியற்றினார் என்பதைச் சங்கர சரித்திரத்தை நன்குணர்ந்த சிலரே அறியக்கூடும். இந் நூலின் உபோத்காதத்தில் இஃதியற்றப்பட்ட காலதேச நிமித்தாதிகள் சுருக்கமாய்க் கூறப்பட்டிருப்பினும் அவற் றை ஸாக்ஷாத்தாகக் கூறும் சங்கரவிஜய பிரமாணவாக்கை யீண்டு சிறிது விமர்சிப்பாம். சங்கரரது சரித்திரங்களைக் கூறும் சங்கரவிஜயங்கள் பல இருப்பினும், இங்கே விமர் சிக்கப்படுவது ஸ்ரீமாதவீயசங்கரவிஜயமேயாகும். இதன் ஆறுவது ஸர்க்கத்தில் மநீஷாபஞ்சகப் பிரகரணத்தை நன் கறிவதனாலேயே ஸ்ரீசங்கரரது அவதாரத்தின் நோக்கம் நன்கு புலனாகும். ஆதலின் அந்த பிரகரணம் வியாக் கியானத்தோடு மூலஸ்லோகங்களும் அவற்றிற்குத் தமிழு ரையும் இங்கே சேர்க்கப்பட்டிருக்கின்றன.

## ஸ்ரீமாதவீய சங்கரவிஜயம்.

### ஆறுவது ஸர்க்கம்.

### மநீஷாபஞ்சகப் பிரகரணம்.

(24 முதல் 52வது ஶ்லோகம் வரை.)

शंकरो दिवसमध्यमभागे
पङ्कजोत्पलपरागकषायाम् ।
जाह्नवीमभिययौ सह शिष्यै-
राह्निकं विधिवदेष विधित्सुः ॥

व्याख्यानं—दिनस्य मध्यमभागे विधिवदाह्निकं विधातुमिच्छुः शिष्यैः सह शंकरः पङ्कजोत्पलानां परागेण कषायवर्णां जाह्नवीमभिययौ ॥

*சங்கர பகவத்பாதர் மாத்யான்னிக கருமத்தை விதிப்படி செய்யும் விருப்புற்றவராய்ச் செங்கமலப் பூக்களின் மகரந்தத்தால் செந்நிறமாய் விளங்கும் கங்காநதிக்குத் தமது ஶிஷ்யர்களுடன் சென்றனர்.*

சங்கரபகவத்பாதர் ஸ்ரீவிஶ்வநாதரைத் தரிசித்தல்.

सोऽन्त्यजं पथि निरीक्ष्य चतुर्भि-
र्भीषणैः श्वभिरनुद्रुतमारात् ।
गच्छ दूरमिति तं निजगाद
प्रत्युवाच च स शंकरमेनम् ॥

व्या—सः श्रीशंकरः चतुर्भिर्भीषणैः श्वभिरनुवृत्तमन्त्यजं चाण्डालं मार्गमध्ये समीपे निरीक्ष्य दूरं गच्छेति तमन्त्यजं स्पष्टमुक्तवान् । स चान्त्यज एनं शंकरं प्रत्युवाच ॥

*செல்லுகையில், வழியில், பயங்கொடுக்கத் தக்க நான்கு நாய்களுடன், ஒரு சண்டாளன் அருகில் வந்தனன். அவனை நோக்கி "ஓ சண்டாளனே! விலகிப்போவாயாக" என்று கூறினார். இவ்வார்த்தைகளைச் செவியுற்ற அச் சண்டாளன் கீழ்வருமாறு பதிலுரைத்தனன்.*

अद्वितीयमनवद्यमसङ्गं
सत्यबोधसुखरूपमखण्डम् ।
आमनन्ति शतशो निगमान्ता-
स्तत्र भेदकलना तव चित्रम् ॥

व्या—तत्र दूरं गच्छेत्युक्तिरसंगता भेदाभावादित्याशयेनाह । 'एकमेवाद्वितीयं' 'एष आत्मापहतपाप्मा' 'निरवद्यं निरञ्जनं' 'असङ्गो ह्ययं पुरुषः' 'सत्यं ज्ञानमनन्तं ब्रह्म' 'विज्ञानमानन्दम्' इत्यादि शतशो वेदान्ता अद्वितीयादिरूपमात्मानमामनन्ति । तस्मिन्नात्मनि तव वेदान्तित्वेन प्रसिद्धस्य भेदकल्पनास्तीत्यहो अत्याश्चर्यमित्यर्थः ॥

*நூற்றுக் கணக்கான உபநிஷத்துக்கள் பரமாத்மாவை அத்விதீயமென்றும், தோஷமற்றதென்றும், அஸங்க ஸச்சிதாநந்தமென்றும், அகண்டமென்றும் முறையிடுகின்றன.*

அந்த பரமாத்மஸ்வரூபத்தில் வேதாந்தியெனப் பிர ஸித்திபெற்ற வுனக்குப் பேத கற்பனையுமுண்டு கோலோ? ஆஹா என்ன ஆச்சரியம்!

दण्डमण्डितकरा धृतकुण्डाः
पाटलाभवसनाः पटुवाचः ।
ज्ञानगन्धरहिता गृहसंस्थान्
वञ्चयन्ति किल केचन वेषैः ॥

व्या—तथाच भेदकलनावांस्त्वमप्येवंविधयतिपङ्क्तौ निविष्टोऽसीति द्योतयन्नाह । दण्डेन मण्डिता अलंकृता हस्ता येषां ते, धृतकमण्डलवः, पाटला आभा येषां तथाभूतानि वस्त्राणि येषां, पटुर्थो वाचो येषां ते । ज्ञानलेशेन विरहिताः किल केचन यतिवेषैर्गृहसंस्थान्वञ्चयन्ति ॥

தண்டமேந்திய அழகிய கைகளையுடையவர்களாயும், கமண்டலந் தரித்தவர்களாயும், பசுமை நிறமுள்ள ஆடையை யுடுத்தவர்களாயும், சொல்வன்மை யுடையவர்களாயும் உள்ள சிலர் ஞானலேசமும் இல்லாமல் இல்லறத்தார்களை வேஷமாத்திரத்தால் வஞ்சிக்கிறார்கள்.

गच्छ दूरमिति देहभृताहो
देहिनं परिजिहीर्षसि विद्वन् ।
भिद्यतेऽन्नमयतोऽन्नमयं किं
साक्षिणश्च यतिपुङ्गव साक्षी ॥

व्या—गच्छ दूरमिति शरीरं परित्यक्तुमिच्छसि उतात्मानमिति विकल्प्य दूषयति । गच्छ दूरमिति । विदुषस्तव नैतदुचितमिति ध्वनयन्संबोधयति—हे विद्वन्निति । तत्राद्यं प्रत्याह—अन्नमयादन्नमयं किं भिद्यते, नैव भिद्यत इत्यर्थः । द्वितीयं प्रत्याह—साक्षिणश्च साक्षी न हि भिद्यते । त्वमेतत् ज्ञातुं योग्योऽसीत्याशयेनाह—हे यतिपुङ्गवेति ॥

*ஹே அறிஞனே! "நீ தூரத்திற் செல்வாயாக" வென்று கூறியது உடம்பினை நீக்கவிரும்பியா? அல்லது உடம்புடையானை நீக்கவிரும்பியா? உடம்பை யெனின், அன்னத்தின் பரிணாமமாகிய நினது ஸ்தூலதேஹத்திலிருந்து அதே அன்னமயமாகிய எனதுடம்பு வேறாகுமோ? ஸன்னியாசிகளுள் சிரேஷ்டமானவரே! உடம்புடையானை யெனின், நினது ஸாக்ஷிசைதன்யத்தினின்றும் எனது ஸாக்ஷி சைதன்யம் வேறதாகுமோ?*

**ब्राह्मणश्वपचभेदविचारः**
**प्रत्यगात्मनि कथं तव युक्तः ।**
**बिम्बितेऽम्बरमणौ सुरनद्या-**
**मन्तरं किमपि नास्ति सुरायाम् ॥**

व्या—प्रत्यगात्मनि भेदं दृष्टान्तेनापि निराचष्टे । ब्राह्मणश्वपचभेदविचारो देहेन्द्रियादिभ्योऽनेकेभ्यो जडेभ्यश्च प्रातिलोम्येनाञ्चतीति प्रत्यक्, स चासावात्मा च तस्मिन् तवाद्वैतवादिनः कथं युक्तः, न कथमपीत्यर्थः । यथा गङ्गायां मंदिरायां च प्रतिबिम्बितेऽम्बरमणौ सूर्येऽन्तरं किमपि नास्ति तद्वदित्यर्थः ॥

இவன் மறையோன், இவன் புலையன் என்னும் பேத வாராய்ச்சி பிரத்தியக் ஆன்மாவில் எவ்வாறு உனக்குப் பொருந்தும்? ஆகாசகங்காஜலத்திலும், கட்குடத்திலுள்ள கள்ளிலும் பிரதிபிம்பித்துள்ள சூர்யனுக்குச் சிறிதேனும் வேறு பாடுண்டா? இல்லை.

शुचिर्द्विजोऽहं श्वपच व्रजेति
मिथ्याग्रहस्ते मुनिवर्य कोऽयम् ।
सन्तं शरीरेष्वशरीरमेक-
मुपेक्ष्य पूर्णं पुरुषं पुराणम् ॥

व्या—नन्वात्मनो भेदशून्यत्वेऽप्यतिपवित्रस्य ब्राह्मण-शरीरस्यातिपापिष्ठस्यान्त्यजशरीरस्य च कथमभेद इति चेत्तत्राह । शुचिर्द्विजोऽहं, हे श्वपच त्वं दूरं गच्छेति शरीरेष्वनेकेष्वप्येकमशरीरं, कालत्रये शरीरसंबन्धविनिर्मुक्तमत एव पुराणं पुराप्यभिनवं, पूर्णं सदैकरसं, पुरुषं सन्तमुपेक्ष्यायं मिथ्याभूत आग्रहस्तव कः नायं तवोचितो यतो मुनिश्रेष्ठस्त्वमित्याशयवानाह—हे मुनिवर्येति ॥

முனிவரிற் சிறந்தோய்! "யான் புநிதமாகிய அந்தணன்; ஆதலின், மலம் மலிந்த சண்டாளனே! நீ தூரத்திற் செல்வாயாக" வென்னும் அஹங்காரம் என்ன? சரீரத்தில் இருப்பதும், சரீரத்திலிராததும், ஒன்றானதும், பரிபூர்ணமானதும், புருஷனெனப்படுவதும், பழமையானதும்,

अचिन्त्यमव्यक्तमनन्तमाद्यं
विस्मृत्य रूपं विमलं विमोहात् ।
कळेबरेऽस्मिन्करिकर्णलोला-
कृतिन्यहन्ता कथमाविरास्ते ॥

व्या—स्वस्वरूपं विस्मृत्य क्षणभङ्गुरे देहेऽहन्तातीवानुचितेति बोधयन्नाह । अचिन्त्यमतः केनापि करणेन न व्यज्यत इत्यव्यक्तमत एवानन्तमत एवाद्यं यत उपाधिमलशून्यं स्वस्वरूपं मोहादविवेकाद्विस्मृत्य गजकर्णवच्चञ्चलाकारेऽस्मिन्ननुभूयमाने कळेबरेऽहंभावः कथमाविरास्ते प्रकटीभवति । विवेकिनां केनापि प्रकारेणास्याविर्भावो न युक्त इत्यर्थः ॥

*கருதப்படாததும், வெளிப்படாததும், வரம்பின்றியதும், ஆதியானதுமாகிய நிர்மலஸ்வரூபத்தை, யறியாமையால் மறந்துவிட்டு, யானையின் காதுகள் அசைவதைப் போன்று நிலையாமையையுடைய இவ்வுடம்பில் நான் என்னும் (மயக்க) உணர்ச்சி நினக்குத் தோன்றியதெங்ஙனம்?*

विद्यामवाप्यापि विमुक्तिपद्यां
जागर्ति तुच्छा जनसंग्रहेच्छा ।
अहो महान्तोऽपि महेन्द्रजाले
मज्जन्ति मायाविवरस्य तस्य ॥

व्या—ननु यद्यप्येवं तथापि लोकसंग्रहेच्छयेदं मयोक्तमिति चेत्तत्राह । विमुक्तिपद्यां विमुक्तिमार्गभूतां विद्यां प्राप्यापि

तुच्छा जनसंग्रहेच्छा किं जागर्ति । अहो अत्याश्चर्यम् । मायाविनां वरस्य श्रेष्ठस्य तस्य परमात्मनो महतीन्द्रजाले भवदादयो महान्तोऽपि मज्जन्तीत्यर्थः ॥

அரிய முக்திக்கு ஸாக்ஷாத் ஸாதனமாகிய தத்துவ ஞானத்தை யடைந்தும், உலகத்திற்கு ஹிதம் செய்ய வேண்டும் என்னும் சிறியதோரிச்சை நின்பால் ஒழியாத தென்ன? அந்தோ! பெரியோருங்கூட மஹாமாயாவி யாகும் பரமேச்வரனுடைய இந்திரஜாலத்தில் மூழ்குகின் றனர் கொல்" என்றனர்.

इत्युदीर्य वचनं विरतेऽस्मिन्
सत्यवाक्तदनु विप्रतिपन्नः ।
अत्युदारचरितोऽन्त्यजमेनं
प्रत्युवाच स च विस्मितचेताः ॥

व्या—एवमन्त्यजवचनमुदाहृत्य, शंकरवाक्यमुदाहर्तुमाह । इति वचनमुक्त्वाऽस्मिन्नन्त्यजे विरामं गते सति, ततः पश्चाद्विप्रतिपन्नोऽयमन्त्यजो भवति न भवतीति विप्रतिपन्नः सत्यवचनोऽत्युदारचरितो विस्मितचित्तः स च श्रीशंकर एनमन्त्यजं प्रत्युवाच ॥

இங்ஙனம் அச்சண்டாளன் கூறியபோது, வாக்குண் மையுடையவரும், சிறந்த சரிதத்தையுடையவருமாகிய அச் சங்கரபகவத்பாதரானவர் ஆச்சரியத்தோடு கூடிய

மனத்தராய் (இவன் சண்டாளனோ? அன்றோ? என) சந்தேகங் கொண்டவராய் அவனைப் பார்த்துக் கீழ்வருமாறு பதிலுரைத்தனர்.

सत्यमेव भवता यदिदानीं
प्रत्यवादि तनुभृत्प्रवरैतत् ।
अन्त्यजोऽयमिति संप्रति बुद्धिं
संत्यजामि वचसात्मविदस्ते ॥

व्या—यदुवाच तदाह सत्यमिति । न त्वमन्त्यजः किंतु देहभृत्प्रवर इति सूचनाय संबोधनम् ॥

தேகமுடையோர்களிற் சிறந்தோய்! இப்பொழுது தங்களாற் கூறப்பட்டது உண்மையே. ஆத்மஞானியாகிய தமது திருவாக்கால், அதாவது உபதேசத்தால் "இவன் சண்டாளன்" என்னும் பேதபுத்தியை அடியோடு ஒழித்து விடுகின்றேன்.

जानते श्रुतिशिरांस्यपि सर्वे
मन्वते च विजितेन्द्रियवर्गाः ।
युञ्जते हृदयमात्मनि नित्यं
कुर्वते न धिषणामपभेदाम् ॥

व्या—भेदशून्यबुद्धेरतिदुर्लभत्वान्न कोऽप्युपालम्भनीय इत्याशयेनाह । सर्वेऽनेके श्रुतिशिरांसि श्रवणेन जानन्ति, तथाऽनेके

विजितेन्द्रियवर्गाः तानि मन्वते च मननं कुर्वन्ति । तथान्तः-करणमात्मनि नित्यं युञ्जते निदिध्यासनं कुर्वन्ति । तथापि प्रतिबन्धकसद्भावाद्भेदशून्यां बुद्धिं केऽपि न कुर्वन्तीत्यर्थः ॥

அநேகர் உபநிடதங்களைச் சிரவணஞ் செய்கின்றனர்; இந்திரியங்களையடக்கி மனனமும் செய்கிறார்கள்; தினந்தோறும் சித்தத்தைப் பரமாத்மஸ்வரூபத்தில் சேர்த்து நிதித்தியாஸனமும் செய்கின்றார்கள். ஆயினும் அபேதபுத்திமாத்திரம் செய்கின்றாரிலர்.

மநீஷாபஞ்சகம் கூறல்.

भाति यस्य तु जगद्दृढबुद्धेः
सर्वमप्यनिशमात्मतयैव ।
स द्विजोऽस्तु भवतु श्वपचो वा
वन्दनीय इति मे दृढनिष्ठा ॥

व्या—ननु तिष्ठत्वन्येषां वार्ता तव बुद्धिरपभेदास्ति न वेत्याशङ्क्याह । ममाभेदबुद्धिरित्युत्तरमनुचितं मन्यमानो 'नमो वयं ब्रह्मिष्ठाय कुर्म' इति याज्ञवल्क्योक्तिमनुसृत्य व्याजेन समाधत्ते । यस्य तु दृढबुद्धेः सर्वमपि जगत्सदैवात्माव्यतिरिक्तं भाति स ब्राह्मणोऽस्तु श्वपचो वा भवतु वन्दनीय इति मम दृढा निष्ठा ॥

பிறருடைய வார்த்தைகள் அங்ஙனமிருக்கட்டும். உனக்குப் பேதபுத்தியுண்டா? இல்லையா? என்றாசங்கித்து மறுமொழி கூறுகின்றனர்.

உறுதியாகிய புத்தியையுடைய எவனுக்கு, இவ்வுலகில் யாவும் ஆத்மஸ்வரூபமாகவே தோன்றுகின்றனவோ அவன்

அந்தணனேயாகுக, அல்லது புலையனேயாகுக. அவனே வணங்கற்குரியவன். என்பதுவே எனது நிச்சயமான உள்ளத்துணிவு.

या चितिः स्फुरति विष्णुमुखे सा
पुत्तिकावधिषु सैव सदाहम् ।
नैव दृश्यमिति यस्य मनीषा
पुल्कसो भवतु वा स गुरुर्मे ॥

व्या—न केवलं वन्दनीय एव, किंतु एवंविधः सम्यग्ज्ञानवान् साक्षान्मम गुरुरेवेत्याह । विष्णुशिवादौ या चितिः चेतनं स्फुरति सैव पुत्तिका पतङ्गिका तदवधिषु जन्तुषु स्फुरति । सैव कालत्रयेऽप्यहं, दृश्यं तु नैवास्तीति यस्य मनीषा स चाण्डालो वा भवतु तथापि मम गुरुः ॥

யாதொருசைதன்யம் விஷ்ணு முதலிய தேவர்களிடத்தும், புழு முதலிய பிராணிகளிடத்தும் (பிறழ்ச்சியின்றி) விளங்குகின்றதோ அதுவே நான்; காணப்படும் பொருள்கள் நானல்லன். என்னும் உறுதியாகிய புத்தியையுடையவன் சண்டாளனே யாயினும் அவன் எனது ஆசிரியனேயாவன்.

यत्र यत्र च भवेदिह बोध-
स्तत्तदर्थसमवेक्षणकाले ।
बोधमात्रमवशिष्टमहं त-
द्यस्य धीरिति गुरुः स नरो मे ॥

व्या—किं बहुना, तत्त्ववित्सर्वोऽपि मम गुरुरित्याह । अस्मिँल्लोके तत्तद्विषयानुभवकाले यत्र यत्र विषये ज्ञानं भवेत्तत्सर्वं मिथ्याभूतं सर्वोपाधिबाधेनावशिष्टं ज्ञानमात्रमहमेव न मत्तः किमपि व्यतिरिक्तमस्तीति यस्य बुद्धिः स यः कश्चिदपि नरो मम गुरुः । एतेन गच्छ दूरमिति मया देहजिहीर्षया नोक्तं नाप्यात्मजिहीर्षया. अपि तूभयतादात्म्याध्यासवज्जिहीर्षया । स च तव नास्ति चेत्तर्हि त्वमपि मम गुरुरेवेत्याक्षेपोऽपि परिहृतो वेदितव्यः ॥

*தத்துவஞானிகள் யாவரும் எனக்கு ஆசிரியரேயாம். "அவ்வவ்விஷயாநுபவகாலத்தில் எவ்வெவ்விஷயங்களினுணர்ச்சி தோன்றுகின்றதோ அவ்வவ்விஷயங்கள் யாவும் மித்தையாம். எஞ்சியவுபாதியற்ற ஞானமாத்திரமே யான்" என்னும் அநுபவம் யாருக்கிருக்கின்றதோ அவர்கள் எமது ஆசிரியரேயாவர். (விலகிப்போவென்று கூறியது உடம்பையுமன்று; சேதனத்தையுமன்று. மற்றோ அவ்விரண்டின் தாதாத்மியாத்தியாஸமுடைய ஜீவபாவத்தை. அந்த ஜீவபாவம் தமக்கின்றேல் தாங்களே யெமதாசிரியர்).*

भाषमाण इति तेन कलावा-
नेष नैक्षत तमन्त्यजमग्रे ।
धूर्जटिं तु समुदैक्षत मौलि-
स्फूर्जदैन्दवकलं सह वेदैः ॥

व्या—एवं निर्व्यळीकं भाषमाणस्त्यक्तान्त्यजविग्रहं प्रकटितस्वस्वरूपं महादेवं ददर्शेत्याह । इति एवंप्रकारेण तेन सह भाष-

माण एष श्रीशङ्करः तमन्त्यजमग्रे न ददर्श । किंतु मौळौ शिरसि स्फुरन्ती चन्द्रकला यस्य तं चतुर्भिर्वेदैः सहितं धूर्जटिं महादेवं संदृष्टवान् । ननु श्रीशंकरादन्यस्य शिवस्याभावात्कथमेवमुच्यत इति चेत्तत्राह । कलावान् ज्ञानकलावतारस्य शंकरस्यावतारिपुरुषेण सह व्यासस्य विष्णुनेव संवादादिकं संभवत्येवेति भावः ॥

*இங்ஙனம் அச்சண்டாளனுடன் பேசிக்கொண்டிருக்கும்பொழுதே, சிவாம்ச ஸம்பவராகிய இச்சங்கரபகவத்பாதரின் முன்னர், அச்சண்டாளன் காணாமல், மறைகள் நான்குடனும் மதியணிந்த சென்னியுடனும் மஹாதேவன் நிற்பதைக்கண்டனர்.*

भयेन भक्त्या विनयेन धृत्या
युक्तः स हर्षेण च विस्मयेन ।
तुष्टाव शिष्टानुमतः स्तवैस्तं
दृष्ट्वा दृशोर्गोचरमष्टमूर्तिम् ॥

व्या—दृष्ट्वा यथाभूतो यत्कृतवांस्तदाह । तं दृष्ट्वा भयेन भक्त्या विनयेन धैर्येण हर्षेण विस्मयेन च युक्तः शिष्टानुमतः श्रीशंकरो नेत्रयोर्विषयमष्टौ भूम्याद्या मूर्तयो यस्य तं महादेवं स्तवैस्तुष्टाव ॥

*சங்கரபகவத்பாதர் அப்பரமசிவமூர்த்தியைத் தரிசித்து அச்சம், அன்பு, விநயம், ஸந்தோஷம், தைரியம், ஆச்சரியம் என்னும் இவற்றோடு கூடியவராய் தன் கண்*

களுக்குத் தோன்றும் அஷ்டமூர்த்திஸ்வரூப சிவனை ஆன்றோர்களும் ஒப்புக்கொள்ளும்படியாய்க் கீழ்வரும் ஸ்தோத்ரங்களால் சந்தோஷிப்பித்தனர்.

दासस्तेऽहं देहदृष्ट्यास्मि शम्भो
जातस्तेंऽशो जीवदृष्ट्या त्रिदृष्टे ।
सर्वस्यात्मन्नात्मदृष्ट्या त्वमेवे-
त्येवं मे धीर्निश्चिता सर्वशास्त्रैः ॥

व्या—देहदृष्ट्या तव दासोऽहमस्मि यतः शं सुखं भवत्यस्मादिति शंभुस्त्वमेव स्वामित्वगुणयुक्त इति सूचयन्नाह—शंभो इति । जीवदृष्ट्याहं तवांशो जातः । ननु कथं निरवयवस्य ममांशस्त्वमिति चेद्यथा सर्वेन्द्रियशून्यस्यापि तव सूर्यचन्द्रवह्निलक्षणत्रिनेत्रविग्रहवत्त्वं तथा मायया तवांशस्यापि संभवादित्याशयेन संबोधयति—त्रिदृष्ट इति । शुद्धात्मदृष्ट्या तु त्वमेव त्वदनन्य एवाहम् । तत्त्वमस्यादिश्रुतेः । तत्र योग्यं संबोधनं सर्वस्यात्मन्निति-तीत्येवं प्रकारेण सर्वशास्त्रैर्मे बुद्धिर्निश्चयं प्राप्ता ॥

பரமேஶ்வரனே! சரீர நோக்கால் யான் உமக்கு அடியேனாய் இருக்கின்றேன்; ஜீவ நோக்காலோ வெனின் யான் நுமது அம்சமாவேன்; முக்கண்ணா! முழுதுமாயவனே! பரிசுத்த ஆத்மபாவத்தில் தாமாகவே யிருக்கின்றேன். இங்ஙனம் ஸர்வஶாஸ்திரங்களின் தாத்பரியத்தால் என் புத்தியானது நிச்சயத்தை யடைந்திருக்கின்றது.

यदालोकादन्तर्बहिरपि च लोको वितिमिरो
न मञ्जूषा यस्य त्रिजगति न शाणो न च खनिः ।
यतन्ते चैकान्तं रहसि यतयो यत्प्रणयिनो
नमस्तस्मै स्वस्मै निखिलनिगमोत्तंसमणये ॥

व्या—प्रसिद्धशिरोभूषणमणितो व्यतिरेकं दर्शयन् स्वाभिन्नं शिवं नमस्करोति—यदिति । प्रसिद्धस्य तादृशमणेरालोकाद्बहिरेव लोको वितिमिरो मञ्जूषा पेटा शाणो निकषः खनिश्च यतिभिरप्रार्थना प्रसिद्धस्य मणेः प्रसिद्धा अत एतस्मादत्युत्कृष्टाय तस्मै तत्पदलक्ष्याय निखिलनिगमशिरोभूषणमणये स्वस्मै त्वंपदलक्ष्याभिन्नाय नमः प्रह्वीभावोऽस्तु । यस्य प्रकाशादन्तर्बहिरपि च लोको वितिमिरः । 'यस्य भासा सर्वमिदं विभाति' इति श्रुतेः । त्रिजगति यस्य मञ्जूषा नास्ति नापि शाणो नापि खनिर्यत्प्रणयिनो यस्मिन् प्रीतिमन्तश्च यतयो रहस्येकान्ते भृशं यतन्ते तस्मै इत्यर्थः ॥

தனது பிரகாசத்தால் பிரபஞ்சத்தை யுள்ளும் வெளியும் அந்தகாரமின்றி விளங்கச் செய்வதும், சாணைக்கல்லின் ஆவஶ்யகதையின்றியதும், சுரங்கத்தில் வெட்டி யெடுக்கப்படாததும், பத்திரமாய்வைத்துப் பூட்டிவைக்கப் பெட்டியில்லாததும், விருப்பமுடைய யதிகள் தனித்தவோரிடத்தில் ரஹஸ்யமாய் அறிய முயலத்தக்கதும், வேதாந்தவாக்கியங்களுக்கெல்லாம் அணியான ஶிரோமணியின் பொருட்டு யான் நமஸ்காரம் செய்கின்றேன்.

अहो शास्त्रं शास्त्रात्किमिह यदि न श्रीगुरुकृपा
चिता सा किं कुर्यान्ननु यदि न बोधस्य विभवः ।
किमालम्बश्चासौ न यदि परतत्त्वं मम तथा
नमः स्वस्मै तस्मै यदवधिरिहाश्चर्यधिषणा ॥

व्या—गुरुकृपया शास्त्राल्लभ्यस्य तत्त्वज्ञानस्याऽऽलम्बनमखण्डैकरसं स्वतत्त्वं नमस्यति । अहो शास्त्रं परमतत्त्वबोधकत्वाद्धन्यतमम् । यद्यप्येवंविधं शास्त्रं तथाऽपि यदि श्रीगुरुकृपाऽस्मिँल्लोके शिष्ये वा न स्यात्तर्हि शास्त्रात्किं, न किमपीत्यर्थः । चिता संचिता संपादिता सा गुरुकृपा किं कुर्यात्किं फलं दास्यति यदि तत्त्वज्ञानस्य विशेषेणोद्भवो नास्ति । बोधानुत्पादिका साऽपि निष्फलैवेत्यर्थः । तथाऽसौ बोधश्च किमालम्ब आलम्बनशून्य एव यदि मम परतत्त्वं न स्यात् । तस्मात्तत्त्वज्ञानालम्बनभूताय परतत्त्वाय स्वाभिन्नाय तस्मै परमात्मने नमः । तथेत्यस्य तस्मादित्यर्थो वा । इह जगत्याश्चर्यबुद्धिर्यत्पर्यन्ता यस्मात्पर आश्चर्यबुद्धिविषयो नास्तीत्यर्थः ॥

*அறிதற்குக் கூடாத பரமாத்மாவை யறிவித்தலின் சாஸ்திரங்கள் மஹாமஹிமையுடையன; ஸத்குருவின் கடாக்ஷமின்றேல் அத்தகைய சாஸ்திரங்களாலும் பயனில்லை. தத்துவ ஞானத்தின் உதயமே குருவநுக்கிரஹத்தின் லிங்கமாம். அஹம்பதலக்ஷ்யார்த்த ஸ்வரூப பரம தத்துவமே தத்துவஞானமாகும். ஆகையால் அதிசயமாகிய புத்திவ்ருத்திக்கு (ஞானத்திற்கு) விஷயமாகிய "அஹம்" வடிவ பரமாத்மாவிற்கு வணக்கம்.*

**इत्युदारवचनैर्भगवन्तं**
**संस्तुवन्तमथ च प्रणमन्तम् ।**
**बाष्पपूर्णनयनं मुनिवर्यं**
**शंकरं सबहुमानमुवाच ॥**

व्या—एवं स्तुवन्तं श्रीशंकरं प्रति महादेवो यदुक्तवांस्तद्दर्शयितुमाह—इतीति ।

*இங்ஙனம் சிறந்த வாக்கியங்களால் பரமசிவனைத் துதிக்கின்றவரும், வணங்குகின்றவரும், ஆநந்தபாஷ்பம் உகுக்கின்றவரும், முனிகளிற் சிறந்தவருமாகிய சங்கர பகவத்பாதரை நோக்கிப் புலைய வேடந்தாங்கிய விஶ்வ நாதர் பெருமை பாராட்டுவதுடன் கீழ்வருமாறு திருவாய் மலர்ந்தருளினார்.*

சங்கரருக்கு ஸ்ரீவிஶ்வேஶ்ரர் அநுக்கிரஹித்தல்.

**अस्मदादिपदवीमभजस्त्वं**
**शोधिता तव तपोधननिष्ठा ।**
**बादरायण इव त्वमपि स्याः**
**सद्वरेण्य मदनुग्रहपात्रम् ॥**

*“பெரியோர்கள் யாவரினும் சிறந்த பெருமையுடையவரே! நீர் எம்மைப்போன்றவர்களின் பெரிய நிலையை யடைந்திருக்கின்றீர். உமது தவ நிலைமையை இந்த லீலையால் பரிசோதித்தோம். ஸ்ரீமத் வியாஸரைப் போலவே நீரும் எமது அநுக்கிரஹத்திற்குப் பாத்திரமாவீர்” என்று சங்கரரை ஆசிர்வதித்தனர்.*

संविभज्य सकलश्रुतिजालं
ब्रह्मसूत्रमकरोदनुशिष्टः ।
यत्र काणभुजसांख्यपुरोगा-
ण्युद्धृतानि कुमतानि समूलम् ॥

வியாஸபகவான் மறைகளைச் சிறப்புறவகுத்துப் பின்னர் கணாதர், கபிலர் முதலியவராது நியாயம், நிரீஸ்வர ஸாங்கியம் முதலிய தீயமதங்களைக் கண்டித்துப் பிரஹ்ம ஸூத்திரங்களை யியற்றினார்.

तत्र मूढमतयः कलिदोषा-
द्वित्रवेदवचनोद्धलितानि ।
भाष्यकाण्यरचयन्बहु बुद्धे-
र्दूष्यतामुपगतानि च कैश्चित् ॥

तद्भवान्विदितवेदशिखार्थ-
स्तानि दुर्मतिमतानि निरस्य ।
सूत्रभाष्यमधुना विदधातु
श्रुत्युपोद्बलितयुक्त्यभियुक्तम् ॥

அதற்கு, மூடபுத்தியுடையவர் சிலர், கலியின் தோஷத்தினால், (தங்களெண்ணத்திற்கு அநுகூலமான) இரண்டு மூன்று வேதவாக்கியங்களைப் பிரமாணமாய் யெடுத்துக் கொண்டு பாஷியங்கள் செய்துள்ளார். இவை புத்திமான்களால் பழிக்கத்தக்கனவே யாகும்.

ஆகையால் வேதாந்த ரஹஸ்யத்தை நன்குணர்ந்த நீர் அவைதிக பாஷண்டமதங்களைக் கண்டித்து, வேதப்பிரசித்

தமான யுக்திகளைக்கொண்டு ப்ரஹ்மஸூத்திரங்களுக்கு ஒரு புதிய பாஷ்யம் செய்வீராக.

௫ एतदेव विबुधैरपि सेन्द्रै-
रर्चनीयमनवद्यमुदारम् ।
तावकं कमलयोनिसभाया-
मप्यवाप्स्यति वरां वरिवस्याम् ॥

தம்மாற் செய்யப்படும் அப்பாஷ்யமே இந்திரன் முதலிய தேவர்களாலும் ஆராதிக்கத் தக்கதாகும்; பிழையற்றதும், புகழ் பெற்றதுமாய்ச் சதுர்முகனது ஸபையிலும் அது நன்கு பூஜிக்கப்படுவதாகும்.

௬ भास्कराभिनवगुप्तपुरोगान्
नीलकण्ठगुरुमण्डनमुख्यान् ।
पण्डितानथ विजित्य जगत्यां
ख्यापयाद्वयमते परतत्वम् ॥

தத்துவமுணர்ந்தவரே! (பட்ட) பாஸ்கரர், அபிநவ குப்தர், நீலகண்டர், மண்டனமிச்ரர் முதலிய பண்டிதர்களை வென்று, வேதாந்தத்தின் பரமஸித்தாந்தத்தை நன்கு விளக்குவீராக.

௭ मोहसंतमसवासरनाथां-
स्तत्र तत्र विनिवेश्य विनेयान् ।
पालनाय परतत्वसरण्या
मामुपैष्यसि ततः कृतकृत्यः ॥

அன்றியும், அஞ்ஞானமென்னும் பேரிருளை யொழிக்க வல்ல ஞானசூரியர்களும், பரமாத்ம தத்துவத்தில் அடைக்கலம் புகுந்தவர்களுமான தமது சிஷ்யர்களை, ஸன்மார்க்கத்தில் சரிப்பவர்களைக் காத்தற்பொருட்டு, ஆங்காங்கு ஸ்தாபித்து, அவதாரகாரியத்தைச் செய்து முடித்தவராய் எம்மையடைவீராக.

**एवमेनमनुगृह्य कृपावा-**
**नागमैः सह शिवोऽन्तरधत्त ।**
**विस्मितेन मनसा सह शिष्यैः**
**शंकरोऽपि सुरसिन्धुमयासीत् ॥**

பரமசிவன் இங்ஙனம் சங்கரபகவத்பாதருக்கு அநுக்கிரஹம் செய்துவிட்டுத், தம்முடன் இருந்த நாய்களின் வடிவ வேதங்களுடன் மறைந்தனர். பகவத்பாதரும் தமது சிஷ்யர்களுடன் ஆச்சரியமுற்ற மனத்தராய்க் கங்கைக்குச் சென்றனர்.

இங்ஙனம் மநீஷாபஞ்சகப் பிரகரணம் ஸ்ரீமாதவீய சங்கரவிஜயத்தில் கூறப்பட்டிருப்பது அறியத்தக்கது. இதனால், ஸ்ரீ சங்கரபகவத்பாதருக்குப் பரமேஶ்வரன் பிரத்தியக்ஷமாகி, அவர் இவ்வுலகில் செய்யவேண்டிய ஸகலகாரியங்களையும் குறிப்பித்திருப்பது நுட்பமாய் உணர்தற்குரியது.

பூமிகை முற்றிற்று.



ஓம் தத்ஸத்

ஸ்ரீ சங்கர பூஜ்யபகவத் பாதாசாரிய சுவாமிகள்
திருவாய்மலர்ந்தருளிய

# மநீஷா பஞ்சகம்

## (மூலமும்)

"இலகுவிவரண" மென்னும் விருத்தியுரையும்.

### मङ्गळाचरणम् ।

सर्वतन्त्रस्वतन्त्राय सदात्माद्वैतवेदिने ।
श्रीमते शंकरार्याय वेदान्तगुरवे नमः ॥

காப்பு

விருத்தம்.

(1) சருவ சித்தாந்த ஞானந் தன்னதாக் கொண்டு பாரில்
ஒருமைசே ரத்து வைதத் துயர்தனிப் பொருள தாகி
யருமறை முடியி னொன்றை யளித்திட வவத ரித்த
குருபரன் சங்க ராசான் குரைகழல் சென்னி சேர்ப்பாம்.

यद्वेदादौ स्वर इति बुधैः प्रोच्यते यत्परस्तात्
ब्रह्मादेरप्यधिकविभवं यत्स्थितं नैगमान्ते ।
यत्सर्वस्य प्रकृतिजनितस्यास्य लोकस्य हेतुः
प्रत्यग्ज्योतिः परमममृतं धीमहि ब्रह्म तत्सत् ॥

வேறு

(2) மறைமுதற் பிரணவ வாச்சிய மாக
வரிட்டர்கள் கூறுவதெதனை
மறையவ ஞுதி யமரருக் குயர்வாய்
வழுத்துவ தெதனைவே தாந்தம்
அறைகுவ தெதனை அவித்தைசே ருலக
மடைந்தது ஹேதுவா யெதனை
நிறைவுறு மந்தப் பெருஞ்சுட ரழியா
நிலைநமக் கருள்செய நினைப்பாம்.

यत्पादाब्जप्रभवविमलश्रीपरागालिभास्व-
न्मत्स्वान्तस्थं प्रणुदति तमःमत्पुञ्जयन्तचण्डम् ।
यत्कारुण्यप्लवपरिजुषा तारितोऽनेन तूर्णं
संसाराब्धिः प्रणतिरनिशं स्याद्गुरूणां पदाब्जे ॥

வேறு

(3) எவனுடைத்தாண் மலர்ப் பொடியா மிரவியிரு
ளெனதுளவல் லிருளும் போமோ
எவனுடைய கருணையெனு மெழிற்புணையாற் சமுசார
மென்னும் நீண்ட
பவவுததி நனிகடந்து பரவின்பக் கரைகாணப்
படுமோ வந்த
வவனுடைய வடிமலரை யநுதினமு மகத்திருத்தி
யன்பு செய்வாம்.

(4) மாவாரும் பலகலையாம் வயிரமது வெவனுரையின்
வன்மை யானே
பூவாரும் பலசமயப் பொருப்பதனைப் பொடித்திடுமோ
புரையில் யாராற்

றாவாரும் மன்றக் கடலிற் றுகளறுசிற் சுடரமுதந்
துலக்க மாமோ
தேவாரு மவன் மலர்த்தாள் திரமனத்தோடநுதினமும்
சிந்தை செய்வாம்.

உபோத்காதம்.

ஈண்டு, இவ்வுலகில், பல்வகைப்பட்ட பிறவிகளிற் செய்த நல்வினைப்பயனாய் மனித சரீரத்தினைப் பெற்று வேத வேதாந்தங்களை நன்கு அத்தியயனஞ் செய்தவரும், (1) நிஷேகம் முதல் நாற்பது ஸம்ஸ்காரங்களை நன்கியற்றப் பெற்றவரும், தாய் தந்தைகளிடத்து அன்பு பூண்டு ஒழுகுபவரும், (2) நித்திய நைமித்திக கிருச்சிர சாந்திராயணாதியருந் தவங்களை நன்கியற்றியவரும், ஸ்ரீ சாம்பசிவ பாதாரவிந்தங்களை யாராதித்தலாலாய சித்தசுத்தியுடையவரும், மறைமுடிவில் விளங்கும் சொப்பிரகாச சொரூபமாகிய ஸ்ரீ மகாதேவனை யுபாசித்ததாலுண்டான மனவொருமையை யுடையவரும், மனைவி மக்கள், வீடு, மாடு, பொன் முதலிய விஷயசுகங்களில் வாந்தியெடுத்த சோற்றிற்போலத் தோஷதிருஷ்டியுடையவரும், ஆத்மாவை ஆஸ்ரயித்ததாயும், அந்த ஸத்தையால் விளங்கி அதனையே மறைப்பதாயும், விவேகத்தோடு கூடிய விசாரணையற்றபோது மாத்திரம் தோன்றுவதாயுமான அவித்தையினின்றும் நீங்குமெண்ணமுடையவரும், பிறப்பாகிய பாசபந்தத்தினின்றும் நீங்கும் இச்சையுடையவரும், பிறப்பிறப்பற்ற பேராநந்த நிலையாகிய மோக்ஷத்தைப்பெற விரும்புபவருமாகிய சில உத்தமாதிகாரி புருஷர்களின் பொருட்டுக் கைலையங்கிரியில் விளங்கும் பகவான், கிருபாநிதியாகிய பரமேஸ்

---

குறிப்பு:—(1) (2) முதலிய எண் குறிப்பிட்டவைகளின் விளக்கத்தை யநுபந்தத்தில் காண்க.

வரன், தீயிற்பட்ட மெழுகென வுருகிய மனமுடையவராய், மேற்கூறிய குணங்களோடு கூடிய அதிகாரி புருஷர்களை யெவ்வுபாயத்தினுற் பிறப்பிறப்பாகிய பெருங்கடலினின் றும் வருத்தமின்றிக் கரைசேர்ப்பிக்கலாமெனத் திருவுளம் பற்றிக், கருணையின் மேலீட்டால், "அதிக ஆழமான சமுசார மென்னும் பெருங்கடலைக் கடப்பதற்கென்றே ஏற்பட்டதும், சிரேஷ்டராகிய குருவென்னும் மாலுமியால் நடத்தப் படுவதும், முன்னிழைத்த நல்வினையாகிய அநுகூலக்காற்றால் சலிக்கப்படுவதுமாயவிச்சரீரமாகிய படகினுள்ள விலையற்ற மாணிக்கமாகிய ஆன்மஞானத்தைச் (3) சந்தேக விபரீதங்களற உபதேசிப்பதற்குச் (4) சாந்தி, தாந்தி முதலிய பல குணங்களோடுகூடி நிர்மலமான அந்தக் கரணத்தையுடைய தன்மையால் ஆன்மபிரஹ்மைக்கிய அநுசந்தானமுடைய (5) பரமஹம்ஸ ஆஶ்ரமியாகிய என்னைவிட மற்றொருவன் உதவா"னெனத் தீர்மானித்துப் பகவான் (6) பாஷியகாரர் நான்கு சிஷ்யர்களோடு, இப் பூவுலகில் அவதரித்து, வைதிகமார்க்கமாகிய அத்துவைதத்தை அவைதிகமாகிய புறச்சமயங்களைக் கண்டிப்பதன் மூலமாய் ஸ்தாபித்துப், பற்பலதேசத்து மன்னவர்களின் முடிகளில் விளங்கும் மணியொளித்திரள் தனது பாதாம் புயங்களில் இலங்க, அவனியை நோக்கி மனோகரமாகிய வனம் வனாந்தரங்களைக் கடந்து வருகையில்,

**भगवत्पादीयः—हे पुल्कस! गच्छ गच्छ।**

விருத்தம்.

(1) சங்கர குரவனோர் நாள் தன்னுடைச் சீடரோடு,
பொங்குசீர் வாரணசிப் புநிதவீதியிற் சரிக்க,
திங்கட் செஞ்சடையாராசான் திரநிலை புவிக்குக்காட்ட,
மங்குறு புலையனாகி வழியினிற் றேன்றி நிற்க.

(2) சீடருள் ஒருவனந்தச்சீரறு புலையற்கண்டு,
பீடுசேர் தருமநூலிற்பேசு வர் ணாச்ரமச்சீர்
நாடிய மனத்தனாகி-நலமிலாப்புலையனே "நீ [வான்.
ஓடுவாய் விலகி" யென்றே யுரைத்திடப்புலையன் சொல்

ஒரு நாள் அஞ்ஞானத்தாலுண்டான குருட்டுத் தன்மையால், மிக்க ஆழமானதும், பேரிருள் சூழ்ந்ததுமான சமுஸாரப் பாழ்ங்கிணற்றில் விழுந்தலையும் ஜீவர்களை யுய்விப்பான்வேண்டிச் சகல பாவங்களை நீக்கவல்லதும், ஆரணங்களிற் பிரதிபாதிக்க பட்ட சிறப்புடையதுமான மிகக் குளிர்ந்த தேவகங்கையின் தீர்த்தத்தாற் பவித்திரமாக்கப் பட்ட (7) ஆநந்தவன மெனும் பெயரிய சிவராஜதானியாகிய ஸ்ரீ காசீ க்ஷேத்திரத்தை யடைந்து, தூநீராடி, அம்பாளோடு கூடி விளங்கும் ஆகத்தினையுடையவரும், அநந்த கல்யாண குணங்களையுடையவரும், அகண்டைக ரஸ ஆநந்த ஸ்வரூபமுடையவருமான ஸ்ரீ ஆநந்தவனத்தீசரை வணங்கிச் செல்லுகையில், ஈசன், பேரன்பால், அஞ்ஞானச் சேற்றிலுண்டான அந்தக்கரண பங்கஜமானது (தனக்கு அபின்னமான) பிரஹ்மாநுசந்தானமாகிய தூநீரால் பரிசுத்தமாக்கப்பட்டுத் தன்னிடத்திற் கற்பிக்கப்பட்ட சகல ஜகத்தையும் கண்ணாடியிற் (8) பிரதி பிம்பம்போற் காண்பவரும், (9) கயிற்றரவுபோற்றனது ஸத்தையால் விளங்கும் உலகத்தைத் தன்வடிவமாகவே கண்டு, ஆநந்தாம்ருத பானத்தால் ஸதா திருப்தியடைந்தவரும், துரீயாஶ்ரமமுடைவருமான ஸ்ரீ (10) சங்கரபகவத் பாதாசாரியருடைய அநுபவநிலையை உலகத்திற்கு வெள்ளிடைமலை போற்றெரிவிப்பதற்காக, ஸ்ரீ ஆநந்தவனத்தீசராகிய (11) விஶ்வேஶ்வரர் தொண்டை வரையில் பருகிய மதுவினாற் சிவந்த நேத்திரங்களோடும், தன்வயமற்ற சரீரத்தோடும், அதிக பயங்கர

மார்ன வடிவத்தோடும், மிகவும் அருவருக்கத் தக்க உடையோடும் கூடிய ஒரு சண்டாள வேடந்தரித்துக் கொண்டு வேதங்களாகும் நான்கு நாய்களோடு எதிரில் வர, ஆண்டு ஸ்ரீ பகவத்பாதாசாரியருடைய சீடர்களுள் ஒருவர் சகல வேதாந்தங்களின் நுட்பங்களை நன்கறிந்திருந்தும், அவ்விருபிறப்பாளர் "இவனோர் சண்டாளன், ஆதலாலிவனருகே செல்லுதல் கூடாதெ" ன்று மனத்தில் நினைத்து, அவனை விலகச் சொல்லவெண்ணி, வருணச்சிரம தருமத்தினின்றும் வழுவாத மனமுடையவராய் ஆண்டோர் மரம்போல் அசையாமல் நின்று, 'விலகிப்போ' வென்றுரைக்க, அவ்வந்தணச்சிரேட்டரை நோக்கிச் சண்டாள வேடந்தரித்து வந்த பரமசிவன் கூறுகின்றார்.

**पुल्कसवेषधारी विश्वनाथः—**

**अन्नमयादन्नमयमथवा चैतन्यमेव चैतन्यात् ।**
**यतिवर दूरीकर्तुं वाञ्छसि किं ब्रूहि गच्छ गच्छेति ॥**

சண்டாள வேஷதாரியாகும் விஸ்வநாதர் கூறுகின்றனர்.

விருத்தம்.

(3) அன்னமே யாதி பூதகா ரியமா
யாகு முன் னுடையுடல்பற்றி
யன்னதோர் தன்மை யாகிய வுடலை
யணுகலா காதெனநினைத்தோ
பின்னமே யில்லாப் பெரியவான் மாவைப்
பேணியான் மாவினையணுகல்
இன்னலா மென்று கருதியோ "வெட்டி
யேகெ"ன வுரைத்தனை துறவோய்?

(இதன் பொருள்) ஓ மறையவரே! யான் கேட்கும் இவ்வினாவிற்குத் தக்க விடை கொடுப்பீராக. அன்ன (12) விகாரமாகிய உன் சரீரத்தினின்று அதே தன்மைய தாய வென் சரீரத்தினை விலகிப்போகச் சொல்லுகின் றாயா? அல்லது, சேதனவடிவமான உன் ஆத்மாவினின்றும் அதே சேதன வடிவமான என் ஆன்மாவை விலகிப்போகச் சொல்லுகின்றாயா? (என்று வினவிச் சித்தாந்தத்தை வெளிப்படுத்துவதற்காக ஸ்ரீபகவத்பாதருடைய விடையை யெதிர்பார்ப்பது போல் அவருடைய முகத்தை நோக்கிச் சண்டாளவேடந்தரித்த ஸ்ரீ பரமேஶ்வரன் மீண்டும் உரைக்கின்றார்.)

(விருத்தியுரை) அன்னவிகாரமாகிய நின் சரீரத்தினி ன்றும் அன்னமயமாகிய வென்சரீரத்தினை விலக்குவதற்கு விரும்புகின்றனையா? வென்னும் முதற்பக்ஷத்தை யங்கீகரி க்கின் அது சரியன்று. ஏனெனின், இரண்டு சரீரங்களும் அன்னமயமாதலின் ஒருதன்மையனவேயாம். ஆகவே என்னுடல் தூய்மையானதென்றும், உன்னுடல் அசுசியா னதென்றும் நீ கூறுதல் யாங்ஙனம் தகுதியுடையதாகும்? என் உடலும் தூயதென்னும் பட்சத்தில் எட்டிப் போவென் றுரைத்தல் எங்ஙனம் பொருந்தும்? ஆதலின், ஈருடல்களும் ஒரு தன்மையானவாயிருத்தலின் எட்டிப் போவென்பது பயனில் கூற்றேயாம்.

"என் சரீரத்திலுள்ள சேதனத்தை விலக்க விரும்பு கின்றனையா?" வென்னும் இரண்டாவது பட்சத்தை யங்கீ கரிக்கின், அதுவும் தகுதி யுடையதன்றாம். ஏனெனின் **एको देवः सर्वभूतेषु गूढः सर्वव्यापी सर्वभूतान्तरात्मा** "ஏகமாய், சொப்பிரகாசமாய், எல்லாப் பூதங்களிலும் வியாபித்து

ஸர்வ சாட்சியாய பிரத்யகாத்மா ஒரு படித்தாகவே யிருக்கின்றது" என்னும் சுருதிப் பிரமாணத்தால் என்னுடைய சேதனத்திற்கும் உன்னுடைய சேதனத்திற்கும் ஒரு வடிவாந்தன்மையே பெறப்படுகின்றது. "விலகிப்போ" வென்னும் நின் கூற்றோ சுத்தாசுத்தபாவத்தால் நிகழ்ந்ததாகும்; சுத்தாசுத்தபாவனையின்றி யிக்கூற்று நிகழ்வதன்று; ஆனால் விசாரணையிலோ, சேதனத்தில் சுத்தாசுத்தபாவமே சித்திப்பதில்லை. ஆதலின், உடல் நோக்காலும் சேதன நோக்காலும் ஆராய்ந்துழி "விலகிப்போ விலகிப்போ" வென்னும் நின்கூற்று பயனற்றதேயாம். இங்ஙனம் கூறியதற்குக் காரணம் மயக்கமேயாகும். ஓ அந்தண சிரேஷ்டரே! இதரர்களுடைய சுபாவங்களைப் பற்றியேனும் கர்மாக்களைப்பற்றினும் நிந்தித்தல் தகுதியாகாது.

परस्य भावकर्माणि न प्रशंसेन्न गर्हयेत् ।
विश्वमेकात्मकं पश्यन् प्रकृत्या पुरुषेण च ॥

மாயாகாரியமென்னுங் காரணத்தாலும், அந்தர்யாமியென்னுங்காரணத்தாலும், முறையே, ஜடசேதனாத்மகமாய் விளங்கும் இப்பிரபஞ்சத்தை, உயர்வு தாழ்வுகளின்றிச் சமமாய்ப் பார்க்கும் நோக்கத்திலுள்ளவர்களாய், இதரர்களுடைய கொள்கைகளையும், செயல்களைம் புகழ்தலுங் கூடாது, நிந்தித்தலுங்கூடாது" என்னும் பிரமாணத்தின் படி, உலகில் ஒவ்வொன்றும், மாயாகாரியத்தன்மையாலோ, அல்லது சேதனத்தன்மையாலோ ஒரு தன்மைத்தாகவே யிருக்கின்றமையின், யாவும் ஒன்றேயாம். ஆதலின் தூஷணம் அயுக்தமாம். (எ—று)

அவதாரிகை.

"கட்குடத்திலூற்றிய பசும்பால் எங்ஙனம் அசுத்தத்தன்மையுடையதாமோ, வங்ஙனமே, அசுத்தமாகிய உன்னுடைய அந்தக்கரணத்தில் பிரதிபலித்த சேதனமும் அசுத்தமுடையதே யாகும்; பரமசிவன் ஜடாமகுடத்திற்றங்கிய பாகீரதீ ஜலம் எங்ஙனந் தூய்மையுடையதாகுமோ, வங்ஙனமே, (13) நிஷ்காமகர்மோபாஸனைகளால் பரிசுத்தமாயவென் அந்தக்கரணத்திற்பிரதிபலித்த சேதனமும் பரிசுத்தமானதேயாகும்" என்று கூறின், என்றாசங்கித்துப் பரமசிவனாகிய சண்டாளன் பின்வருமாறு கூறுகின்றார்.

प्रत्यग्वस्तुनि निस्तरङ्गसहजानन्दावबोधाम्बुधौ
विप्रोऽयं श्वपचोऽयमित्यपि महान् कोऽयं विभेदग्रहः ।
किं गङ्गाम्बुनि बिम्बितेऽम्बरमणौ चण्डाळवीथीपयः-
पूरे वान्तरमस्ति काञ्चनघटीमृत्कुम्भयोर्वाम्बरे ॥

விருத்தம்.

(4) அலையிலாச் சகசாநந்த வறிவெனு முததிதன்னிற்
புலையனீ மறையோன் யானேன் பொருத்து மிப்பேதம் யாங்ஙன்
புலையவர் வீதி நீரிற் புநிதகங் கையின்வெய் யோற்கும்
மலமறு பொன்மட் பாண்ட வானிற்கும் பேதமுண்டோ.

(இதன் பொருள்) அலையில்லாத (14) சகசாநந்த அறிவுக்கடலாகிய பிரத்தியக் வஸ்துவினிடத்தில் "யான்மறையோன், யான் புலையன்" என்னும் பேதமயக்கமேது?

கங்காஜலத்திலும், பறைச்சேரி வீதி நீரிலும் பிரதிபலித்த சூரியபிம்பங்களுக்கு என்ன பேதம்? அன்றியும், பொன் குடத்தில் வளைவுபட்ட ஆகாசத்திற்கும், மட்குடத்தில் வளைவுபட்ட ஆகாசத்திற்கும் என்ன பேதம்? நிச்சயமாய் யாதொரு பேதமும் இல்லை யென்பது பொருள்.

(விருத்தியுரை) ஓய் மறையோனே! துரும்பு முதல் நான்முகப் பிரமனீறாகவுள்ள ஸகல ஜீவர்களிடத்தும் பிரத்தியட்சத் தன்மையால் எக்காலத்திலும் 'நான் நான்' என்பதற்கு விஷயமாய் ஸர்வ (15) சாட்சியா யிருப்பது (16) பிரத்தியக் ஆன்மாவாம். இத்தகைய நித்தியாபரோட்ச பிரத்தியகபின்னப் பிரஹ்மத்தின்கண் சச்சிதாநந்தவடிவ (17) சொரூபலட்சணம் கூறப்படுகின்றது.

"அலையிலாச் சகஜாநந்த வறிவெனு முததிதன்னில்"

விகற்பமற்றதாயும்,சத்தியமானதாயுமுள்ள யாதொரு பரமாநந்த ஞான சமுத்திரத்தில், ஸர்வமும் ஏகரஸமா யிருத்தலின், அப் பரப்பிரஹ்மத்திற்குச் சச்சிதாநந்தங்களே ஸ்வரூபமா மெனக் கூறியதாயிற்று.

सत्यं ज्ञानमन्तं ब्रह्म, आनन्दो ब्रह्म। 'சத்தாயும் சித்தாயும் (18) தேசகால வஸ்து பரிச்சேதமற்றதாயுமாயிருப்பது பிரஹ்மம்; ஆநந்த வடிவமே பிரஹ்மம்' என்னும் சுருதி இதற்குப் பிரமாணமாம். இத்தகைய உபாதிரகித நிர்விகல்ப பரிபூர்ண சச்சிதாநந்த அகண்டைகரஸப் பிரஹ்மத்தில் இவன் மறையோன், இவன் சண்டாளன் என்னும் உத்தம அதம பாவமாகிய இப்பேத ஞானம் ஏது? முற்றும் இல்லையென்பது அபிப்பிராயமாம். இதற்குத்திருஷ்டாந்தங் கூறுகின்றார். பரிசுத்தமாகிய கங்கையின் நீரிலும், மிக்க அசுத்தமாகிய பறைச்சேரி வீதியிலோடும் அழுக்கு ஜலத்திலும் பிரதிபலித்த சூரியப் பிரதிபிம்பங்களுக்கு

எங்ஙனம் யாதொரு பேதமுமில்லையோ, அங்ஙனமே, பரிசுத்தமான அந்தக்கரணத்திலும், அசுத்தமான அந்தக்கரணத்திலும் பிரதிபலித்த சேதனங்கட்குக் கிஞ்சித்தும் பேதமில்லை. இங்ஙனம் அபேதமாயிருக்கும் சேதனத்தில் எவன் பேதத்தினைக் கற்பிக்கின்றானோ அவன் நாசவடிவ சமுசாரத்தையடைந்து மிகுந்த துக்கத்தை யனுபவிக்கின்றான். மேன்மையானதும் தாழ்மையானதுமான சரீர உபாதிகளின் பேதத்தால் சேதனத்தின் கண் பேதம் தினையளவும் சித்திப்பதில்லை. இது பிம்பப்பிரதிபிம்ப பட்சமாம்.

இனி வேறொரு திருஷ்டாந்தத்தால் (19) அவச்சேத பட்சத் தினைக்கூறுகின்றார்.

பொற்குடத்தில் உபகிதமான (வளைவுபட்ட) ஆகாசத்திற்கும், மட்குடத்தில் வளைவுபட்ட ஆகாசத்திற்கும் என்ன பேத மிருக்கின்றது? எங்ஙனம் உண்மையில் (20) வியாபகமான ஆகாசம் பொன் மட்குடங்களின் (21) உபாதி சம்பந்தத்தால் பலவாய்க்கருதப்படுகின்றதோ, அங்ஙனமே, (22) பாரமார்த்திகசத்திய ஸ்வரூப சேதனம் (23) வர்ணாச்ரமாதி அத்தியாசங்களற்றதாயினும், தேகாதிகளின் சம்பந்தத்தாற் பலவாயும், தேச காலாதி பரிச்சேதமுடையதாயும், வர்ணாச்ரமாதி பேதங்களையுடையதாயும், அஞ்ஞானத்தாற் காணப்படுகின்றது; இது மயக்கமேயாகும்.

ஆதலின், எங்கும் அகண்டைகரஸ சொப்பிரகாச சித்கன ஆநந்த வடிவமாய் விளங்கும் சேதனத்தின்கண் பேதங் கற்பித்தல் தகுதியுடைய தன்றாகவே, "என்னுடைய சேதனம் தூய்மையானதென்றும், உன் சேதனம் தூய்மை யற்றதென்றும் ஆதலின், 'விலகிப்போ' வென்று கூறுதல் தகுதியேயா" மென்னும் உன்னுடைய வார்த்தை முற்றும் அசங்கதமேயாம்.

(எ—று).

இங்ஙனம், சண்டாளவேடந்தரித்துவந்த பரமசிவன் ஸ்ரீ சங்கரபூஜ்யபகவத்பாதரவர்களின் சீடரை நோக்கித் திருவாய்மலர்ந்து, ஆசாரியாளின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள விரும்புவதுபோல் ஆசாரியருடைய முகத்தைப்பார்த்தனர். உடனே ஸ்ரீ சங்கராசாரியர் தமக்கெதிரில் நிற்கும் ஆநந்தவனத்தீசராகிய சண்டாள வேடந்தரித்து வந்த பரமசிவனது முககமலத்தை யுற்று நோக்கி, வேதாந்தப் பாற்கடலை (24) நியாயமாகிய மத்தால் விசாரணையாகிய கடைதல் வாயிலா யுண்டாகிய அத்வயாநந்த பிரஹ்மானுபவரஸம் நிறைந்தொளிரும் அவருடைய திருவாக்காகிய அமுதத்தைச் செவிவாயால் பருகி, ஒப்புவமையற்ற திருப்தியோடுகூடிய மனமுடையவராய்த், தமக்கெதிரில் நிற்பவரைத் தாமேயெனத் தெளிந்து பின்வருமாறு கூறுகின்றார்.

(அவதாரிகை). யோகாதி சாதனங்களற்ற முமுட்சுக்களுக்கும் வருணச் சிரமாதி அபிமான மறுதற்பொருட்டும், உண்மையான பிரஹ்மாத்மைக்கியபாவமுண்டாதற் பொருட்டும் (25) "ஸ்ரீ மநீஷா பஞ்சகம்" என்னும் ஐந்து பாக்களால் தமது அநுபவநிலையைத் திருவாய் மலர்ந்தருளுகின்றார்.

உபோத்காதம் முற்றிற்று.



# நூல்

ஆன்மா அவஸ்தாத்திரய ஸாட்சி யென்று கூறுதலால்
பிரத்யகான்மாவிற்கும் சுத்த சேதனத்திற்கும்
அபேதமே யெனல்.

**भगवत्पादः —**

**जाग्रत्स्वप्नसुषुप्तिषु स्फुटतरा या संविदुज्जृम्भते**
**या ब्रह्मादिपिपीलिकान्ततनुषु प्रोता जगत्साक्षिणी ।**
**सैवाहं न च दृश्यवस्त्विति दृढप्रज्ञा हि यस्यास्ति चेत्**
**चण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम ॥१॥**

*பகவத் பாதர் கூற்று :—*

விருத்தம்.

(1) *"அவத்தைகண் மூன்றி லயன்முத லுடலி*
*லநுகத மாயவோ ரறிவே*
*யவித்தைசெய் புவிக்குச் சாட்சியே யானும்*
*அறிபடு பொருளல னெ"னவே*
*யவித்திடு மையஞ் செறிதிட ஞானி*
*யாயவன் புலையனா யினுமென்*
*தவத்துறு மறையோ னாயினென் அவனே*
*சற்குரு வென்கருத் திதுவே.*

(இதன் பொருள்) "ஜாக்கிர, சொப்பன, சுழுத்தி களில் எந்தச் சேதனம் பிறழ்ச்சியற்றுப் பிரகாசிக்கின்றதோ, நான்முகப் பிரமன் முதல் புழு வீறுகவுள்ள ஸகல சராசர சரீரங்களிலும் எந்தச் சேதனம் அதிஷ்டான

மாய் விளங்குகின்றதோ, சகல உலகங்களுக்கும் எது ஸாட்சியாய்ப் பிரகாசிக்கின்றதோ அந்த ஸச்சிதாநந்த வடிவ பரம்பொருளே யான்; காணப்படும் (திரிசியப் புறப்) பொருள் யானல்லன்.'' என்னும் திடஞானம் எவனுக்குண்டாயிருக்கின்றதோ அவன் புலையனுருக; மறையோனுருக; அவனேயெனது (26) சற்குரு'. இதுவே எனது தேர்ந்த அபிப்பிராயம்.

(விருத்தியுரை) ஆதித்தன் முதலிய வதிஷ்டான தெய்வங்களாலநுக்கிரகிக்கப்பட்ட நேத்திராதி இந்திரியங்களுக்கு உருவமாதி விஷயங்கள் பிரத்தியட்சமாகும் நனவின் கண்ணும், புறக்கரணங்கள் உபராமம் (ஓய்வு) அடைந்தும், அகக்கரணமாகிய சித்தமே சப்தாதி பார்க்கப்படும் விஷயங்களாகவும், பார்ப்பவனுகவும், பார்வையாகவும் பரிணமித்து விளங்கும் கனவின் கண்ணும், காரணமாகிய அநாதி அஞ்ஞானத்தின் கண் சித்தம் லயித்து "ஒன்றுந் தெரியாமல் சுகமாய்த் தூங்கினேன்" என்று உணராது உணர்வதாகிய (27) ஸம்பிரஸாத வடிவ துயிலின் கண்ணும், எந்த அறிவானது "நான் நான்" என்று நன்ருய்ப் படர்ந்து விளங்குகின்றதோ, எந்த ஸம்வித்தானது நான்முகப் பிரமன் முதல் புழு வீருகவுள்ள எண்பத்துநான்கு லட்சம் ஜீவகோடிகளின் புத்தியின் கண், மணி மாலையிற் கயிற்றைப்போல், வியாபித்து விளங்குகின்றதோ, எந்த ஞானமானது பிரமன் முதலிய ஸகல பிராணிகளின் சரீரங்களிலும் கர்த்ருத்வாதி தர்மங்களற்றுக் கேவலம் சாட்சி மாத்திரமாய் விளங்குகின்றதோ அதுவே நான். அஃதாவது, அவஸ்தாத்திரயங்களிலும் அவற்றைப் பிரகாசிப்பிக்கச்செய்யும் காரணத்தால் (28) அநுவர்த்தித்துள்ளதும், உற்பத்தி, நாசம், முதலிய தர்மங்

களற்றதுமான சுயம்பிரகாச வடிவ சேதனமே நான்; நான்முகப் பிரமன் முதல் புழு வீறாகவுள்ள சகல வியஷ்டி தேகங்களிலும் வியாபித்திருந்து "நான் நான்" என்று விளங்கும் நிருபாதிக அறிவே யான்; மேலும், ஸர்வ ஜடப் பிரபஞ்சத்தையும் பிரகாசிப்பிக்கச்செய்யும் சித்தே நான் என்பது இதன் திரண்டபொருளாம். நான் கடம், சுவர் முதலிய திருசியப் பொருள்களல்ல; கடாதிகட்குச் சாட்சியாலறியப்படுந் தன்மை யுண்மையால்; எது எது (28-i) சாட்சியமோ அதுவது சாட்சியன்று; ஆதலின் யான் திருசியப்பொருள் அன்று. தேகேந்திரியாதிகளும் நானன்று; தேகாதிகட்கு ஜடத்தன்மையுண்மையால்; உற்பத்தியுடைய தன்மையால்; எவை ஜடமோ, எவையுற்பத்தி நாசங்களையுடையனவோ, அவை நானன்று. என்றிங்ஙனமாய திடஞானம் யாருக்கிருக்கின்றதோ அவனே (29) பிரம நிஷ்டனெனப்படுவன். அவன் சண்டாளனுகட்டும், மறையோனுகட்டும், அவனே என்னுடைய (30) காரண குருவாவன். இதுவே எனது தேர்ந்த அபிப்பிராயமாம். இந்த ஸ்லோகத்தால் ருக்வேதத்தின் மஹாவாக்கியமாகிய "प्रज्ञानं ब्रह्म" 'பிரக்ஞானம் பிரஹ்ம' என்பதன் அர்த்தம் கூறப்பட்டது.

जाग्रत्स्वप्नसुषुप्तिषु स्फुटतरा या संविदुज्जृम्भते என்பதனுல் प्रज्ञान சப்தத்தின் அர்த்தமும் या ब्रह्मादिपिपीलिकान्ततनुषु प्रोता जगत्साक्षिणी என்பதனுல் பிரஹ்ம சப்தத்தின் அர்த்தமும், सैवाहं नच दृश्यवस्त्विति யென்பதனுல் ஸாமாநாதிகரண்ய அகண்ட ஐக்கியார்த்தமும் ஸூசிக்கப்படுவதறியத்தக்கது.

குறிப்பு:—அநேக ஜன்மங்களில் திடமாய்ப் பாவித்து வந்ததால் இந்த ஜன்மத்தில் பிறருடைய உபதேசமின்

றியே காமக்குரோதாதி துர்வாஸனைகள் எங்ஙனம் (ஒருவனது சித்தத்தில்) நிஷ்காரணமாய் வெளிப்படுகின்றனவோ, அங்ஙனமே, வெகு காலமாய் ஆன்மப்பிரஹ்மைக்ய அநுசந்தானம் செய்துவர ஒரு காலவிசேஷத்தில் சாஸ்திராத்தியயனம் முதலிய சாதனங்களின்றியே ஒரு புருஷனுக்கு எதிரில் விளங்கும் கடம்போலச் சகஜமாய்த் தன்னுடைய நிஜவடிவந் தோன்றும்; இதுதான் திடஞானத்தின் நிலை.

## அவதாரிகை.

முன்னர் ஜீவப்பிரஹ்மைக்கியங் கூறபட்டது. "எதனின்றும் இந்தப் பூதங்கள் உண்டாகின்றனவோ" என்னும் சுருதிப் பிரமாணத்தால் பரப்பிரஹ்மத்திற்கு ஜகத்காரணத்துவஞ் சித்திக்கின்றமையினாலும், ஜீவாத்மாவிற்கு அங்ஙனஞ் சித்தியாமையினாலும் ஜீவப்பிரஹ்மங்களுக்கு ஐக்கியம் எங்ஙனம் பொருந்தும்? என்று ஆசங்கிக்கின், அங்ஙனமன்று. ஏனெனின், "எங்ஙனம் சொப்பன உலகம் நித்திராதோஷத்தோடு கூடிய வென்னில் கற்பிக்கப்பட்டதோ; வங்ஙனமே, இக்காரிய வடிவ ஜாக்கிரப் பிரபஞ்சமும், அதன் காரணமாகிய பரமும், முக்குண வடிவ அவித்யா தோஷத்தினுல் என்னில் கற்பிக்கப்பட்டிருக்கின்றன" என்று சுருதிகளில் கேழ்க்கப்படுவதால் பிரத்தியக் ஆன்மாவிற்கும் ஜகத்காரணத்துவம் சித்திக்கின்றது. ஆதலின் ஜீவப்பிரஹ்மங்களுக்கு ஐக்கியம் பொருந்தும். மேலும், "பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்து அப்பிரபஞ்சத்திலேயே அநுப்பிரவேசம் செய்தனர்." என்று சுருதி கூறுவதால் பிரத்தியக் ஆன்மா ஸாக்ஷாத் பிரஹ்மமேயாம். அன்றியும், "தத்துவமஸி" என்னும் மகாவாக்கியமும், கற்பித ஜீவபாவமடைந்துள்ளவனை யுத்தே

சித்துச் சுபாவசித்தமாயுள்ள பிரஹ்மபாவத்தையே உப தேசித்து ஞாபகப்படுத்துகின்றது. ஆதலின் பிரத்திய கான்ம பரமான்மாக்களுக்கு ஐக்கியம் பொருந்துமென் பதை இச்செய்யுளில் வற்புறுத்துகின்றார்.

ஈசனேடிச்சக மென்னிற் கற்பிதமெனல்.

ब्रह्मैवाहमिदं जगच्च सकलं चिन्मात्रविस्तारितं
सर्वं चैतदविद्यया त्रिगुणया सेशं मया कल्पितम् ।
इत्थं यस्य दृढा मतिः सुखतरे नित्ये परे निर्मले
चण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम ॥

விருத்தம்.

(2) பிரமமே யானும் இச்சகம் யாவும்
பேதமில் சின்மய மென்றும்
பரனுடன் யாவும் முக்குணவிருளாற்
பகருகற் பிதமெனத் தெளிந்து
பரமவா நந்த நித்திய சுத்த
பரமியா னெனுந் திடஞானி
வரகுலி யெனினு மிகழ்புலை யெனினு
மாகுருவென் கருத்திதுவே.

(இதன் பொருள்) "காணப்படும் இவ்வுலகம் கேவலம் சித்தினால் விளங்குகின்றது. ஜக ஜீவ பர வடிவ சர்வப் பிரபஞ்சமும் ஸத்துவம் ரஜசு தமசு என்னும் முக்குண வடிவ அவித்தையால் என்னில் கற்பிக்கப்பட்டிருக்கின் றன. ஆனால், நானே பிரஹ்ம சொரூபன்" என்றிங்ஙனம் எவனுக்கு நிரதிசயாநந்த நித்திய நின்மலப் பரம்பொருளி

டத்தில் அபேதப்பட்ட திடஞான முண்டாயிருக்கின்றதோ வவன் சிரேஷ்டமாகிய குலத்திலுதித்த மறையோனுயினும், அல்லது யாவர்களாலு மிகழத்தக்க கடையனுயினும், அவனே எனது மஹா குருவாவன். இதுவே எனது நிச்சயம். (எ—று)

(விருத்தியுரை). "எங்ஙனஞ் சொப்பன திருஷ்டாவினுல் கற்பிக்கப்பட்ட (31) திரிபுடிவடிவ சொப்பன உலகமானது கேவலம் திருஷ்டாவின் (சின்மாத்திரத்தின்) ஸ்வரூபமோ, வங்ஙனமே, தேவ, மனுஷ்ய, பசு, பக்ஷி, ஸ்தாவர ஜங்கமமாதி நானுவாயும், (32) இதமாகார விருத்திக்கு விஷயமாய் (33) அபரோக்ஷமாய் அநுபவிக்கப்படுவதாயுமான இந்த ஜாக்கிரப் பிரபஞ்சமும், சப்த (சுருதி)ப் பிரமாணத்தாற் சித்திப்பனவாகிய கோடிக்கணக்கான ஆநுஸ்ரவிக மற்றைய உலகங்களும் கேவல சின்மாத்திரத்தினுல் விளங்குகின்றனவே யாகும்; ஆதலின், ஸர்வமும் சின்மயமேயாம். கற்பிதத்தன்மையால். தேச, கால, வஸ்து பரிச்சேதமற்ற, சச்சிதாநந்தவடிவ என் சொரூபத்தின்கண் முக்குண வடிவ அநாதி அவித்தையால் ஜகமென்றும், பரமென்றும் கர்த்தாபோக்தா வடிவ ஜீவனென்றும் பலவாய்க் கற்பிக்கப்பட்டன. கற்பித ஜகஜீவபரமாகிய யாவும் என் (ஆத்மாவின்) வடிவமேயாம்; என்னைத்தவிர வேறு பொருளின்று. ஆதலின் எங்கும் நிறைந்து எல்லாமாயும் விளங்குகின்ற பெரிய பொருளே (பிரஹ்மமே) யான்." என்றிங்ஙனமாய திடஞானமானது எவனுக்குப் பூர்வஜென்ம ஸுக்ருத பரிபாக விசேஷத்தாற் கிடைத்த பரசிவ வடிவ தேசிகனது அருளாலுண்டாய், அவனுடைய சித்தமானது நிரதிசயாநந்தக் கடலாயும், திரிகாலாபாதிதமாயும், அஞ்ஞானத்திற்கும் அதன் காரியமான யாவற்றிற்

கும் அதீதமாயும், அதிஷ்டானமாயும், ஸர்வோத்கிருஷ்டமாயும் விளங்கும் பரம்பொருளிடத்தில் ஐக்கியப்பட்டுத் "தான் ஸ்தூல ஸூக்ஷ்ம காரணமாகிய சரீரத்திரயங்களன்று; அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆநந்தமயமாகிய பஞ்சகோசங்களுமன்று." என்றிங்ஙனம் ஜாதி, வருணாச்ரமாதி ஸகல அபிமானங்களுமற்றதாய் ஸர்வ உபாதிகளும் நீங்கி ஸகலவேதாந்தங்களிலும் பிரதிபாதிக்கப்பட்ட மகா மகிமை பொருந்திய அகண்டைகரஸ (34) ஆத்மகோசர வ்ருத்தியில் அநவரதமும் அழுந்தியிருக்கின்றதோ, எவன் ஸ்வாத்மானுபவ ஆநந்தாம்ருதத்தைப் பருகியதால் நிரங்குச திருப்தியோடு ஆநந்தகனமாய் விளங்குகின்றானோ அவன் மறையோனாகுக; அல்லது சண்டாளனாகுக. அவனே எனது பரம குருவாவன். இதுவே எனது நிச்சயம்.

இந்த ஶ்லோகத்தில் யஜுர்வேதத்தின் மஹாவாக்கியமாகும் अहं ब्रह्मास्मि என்பதன் அர்த்தம் நன்கு நிரூபிக்கப்பட்டுள்ளது. ஜக ஜீவபரங்களின் உபாதிகளை யொழித்து அகண்ட சின்மாத்திர திருஷ்டியால் ஐக்கியம் சித்திப்பது விளக்கப்பட்டுள்ளதறியத்தக்கது.

(அவதாரிகை.) "கிளிஞ்சலிற்றோன்றும் வெள்ளி எங்ஙனம் அனுபவயோக்கியமன்றோ, வங்ஙனமல்லாது, இச்சகம் அனுபவத்திற்கு யோக்கியமாயிருப்பதால் யதார்த்தமேயாம். ஆகவே பிரஹ்மம் ஒரு யதார்த்தப் பொருளும் உலகம் ஒரு யதார்த்தப் பொருளுமாக வேற்படுகின்றன. இதனால், 'एकमेवाद्वितीयं ब्रह्म' என்னும் பிரமாணத்தால் சித்திக்கும் அத்வைதத்திற்குக் கேடு சம்பவிக்கின்றதன்றோ?" என்று கூறின், அங்ஙனமன்று. "எங்ஙனம், அனுபவயோக்கியமாகிய சொப்பன உலகம் மித்தையோ அங்ஙனமே,

இச் சாக்கிர உலகமும் மித்தையேயாகும். ஆரோபிதத் தன்மையால். ஆரோபித ஜாக்கிரப் பிரபஞ்சம் மித்தை யாய் முடியவே அதிஷ்டானமான ஸச்சிதாநந்த வடிவ சேதனம் ஒன்றே ஸத்யமாய் மிஞ்சுகின்றது. ஆதலின் அத்வைதத்திற்கு யாதொரு கேடும் சம்பவிப்பதில்லை" யென்று இச்செய்யுளில் கூறுகின்றார்.

உரைக்கு மிவ்வுலக முன்னிற் பொய்யே யெனல்.

शश्वन्नश्वरमेव विश्वमखिलं निश्चित्य वाचा गुरो-
र्नित्यं ब्रह्म निरन्तरं विमृशता निर्व्याजशान्तात्मना ।
भूतं भावि च दुष्कृतं प्रदहता संविन्मये पावके
प्रारब्धाय समर्पितं स्ववपुरित्येषा मनीषा मम ॥ ३ ॥

விருத்தம்.

(3) குரவனார் வாக்கால் இச்சகம் பொய்யாம்
குற்றமில் பிரமமே யுளதென்
றொருமையாய் நாளுமுணர்ந்து தன்னிடத்தி
லொன்றிய சாந்தமார் மனத்தன்
புரிந்தமுன் வினையும் பவிடிக வினையும்
போதமாம் வன்னியா லெரித்தே
இருக்கு மூழ்க்குடலை யீந்து வாணிகர்த்தான்
இறையவனென் கருத்திதுவே.

(இதன் பொருள்.) கருணையே வுருவெடுத்து வந்த பரமகுரவனது நல்லுபதேசத்தினால், காணப்படும் இச் சகம் மித்தையே யாமென்று நிச்சயித்து 'நாசமற்ற பரம் பொருளே நான்' என்று எப்பொழுதும் அநுசந்தானம்

செய்யும் சாந்த சித்தமுடைய ஞானி, ஆகாமி சஞ்சித கர்மாக்களை ஞானத் தீயால் எரித்து மிஞ்சிய பிராரப்தத்தின் பொருட்டுத் தன்னுடலை அர்ப்பணஞ் செய்கின்றான். (இத்தகைய ஸர்வகர்மரகித ஜீவன் முத்தனே எனது பரம குருவாவன்) இதுவே எனது நிச்சயம்.

(விருத்தியுரை) ஈஸ்வரனுடைய அநுக்கிரகத்தாலும் குரவன் அருளாலும், "காணப்படும் இவ்வுலகம் அடிக்கடி, நிமிஷத்திற்கு நிமிஷம் மாறும் சுபாவமுடையகாரணத்தால் அநித்தியமென (மித்தையென) நிச்சயித்து, முக்காலத்திலும் அழியாததாயும், பிரபஞ்சாதீதமானதாயும், சொப்பிரகாச சித்தேகரஸமாயும், ஸதானந்தகனமாயும் விளங்கும் யாதொரு பிரஹ்மமுளதோ அதுவே நான்" என்றிங்ஙனம், ஸர்வகர்ம ஸந்நியாசம் செய்து வெகுகாலம் விஸ்வாஸத்தோடு விடாது செய்து வந்த அநுசந்தானத்தின் திட ஸம்ஸ்காரத்தால் தன் உண்மை நிலையை அபரோக்ஷமாய் அறிந்து அதுவாகவே நின்று (சித்தத்திலுள்ள ஸகல அசுபவாஸனைகளும் அற்ற தன்மையால் சாந்தஸ்வரூபமாய்) விளங்கும் ஜீவன் முத்த புருஷன் பூர்வ ஜென்மங்களிற் செய்யப்பட்டு இன்னும் பலனுக்கு வராத ஸஞ்சித கர்மாக்களையும், நிகழும் ஜன்மத்தில் ஞான உற்பத்திக்கு முன் செய்து இன்னும் பலனுக்கு வராத ஆகாமி கர்மாக்களையும், ஞானத் தீயாலெரித்து, மிஞ்சியதான பிராரப்தத்தின் பொருட்டுக் காரிய கரண ஸங்காதமான தன் சரீரத்தை அர்ப்பணம் செய்து ஸகலத்திற்கும் ஸாக்ஷிமாத்திரமாய் விளங்குகின்றான். இத்தகைய பிரஹ்மநிஷ்டனுக்குப் பிரபஞ்சத்தின் தோற்றமென்பது, ஒரு சிறிதுமில்லை. அஸ்தி, பாதி, பிரியம், நாமம், ரூபம் எனப் பிரதீதியாகும் ஐந்து அம்சங்களுள் மித்தியாபாகங்களான நாம

ரூபங்களைத்தள்ளி நித்தியமான அஸ்தி பாதி பிரியங்களைப் பார்ப்பதனால். "குரவனுர் வாக்கால் இச்சகம் பொய்யாம்" என்று கூறியதன் தாற்பரியமாவது :—"குருஉபதேசமன்றி எந்தச் சாஸ்திரார்த்தமும் அனுபவத்திற்கு வருவதில்லை." "தேசிகன் அருளே ஆத்மலாபத்திற்கு நேர்ஸாதனம்." "குருவசனமே ஜனனமரணரூபவியாதிக்குச் சிறந்த ஔஷதம்." என்னும் பல ஶ்ருதிப்பிரமாணங்களால் சற்குரு வாக்கியமே இதர பிரமாணங்களைக் காட்டிலும் பிரபலமாமென்பதாம்.

உலகம் மித்தையென்று நிச்சயிப்பதே வைராக்கியப் பிராப்திக்கும் காரணமாம். வைராக்கியமாகிய உபரதியே (ஸந்நியாஸமே) பிரஹ்ம விசாரத்திற்கு நேர்சாதனமாம். வைராக்கியமில்லாதவர்க்கு ஆத்ம விசாரணையில் (35) அதிகாரமில்லை என்பதைக் குறிப்பிக்க "உலகத்தைப் பொய் யென்று நிச்சயித்துப் பின்னர் பிரஹ்மபாவனை செய்யத் தக்கதெ"ன்று கூறப்பட்டது.

स तु दीर्घकालनैरन्तर्यसत्कारसेवितया दृढभूमिः ।

"நெடுநாள் இடைவிடாது சிரத்தையுடன் ஆத்ம விசாரம் செய்யின் ஸ்வரூப ஸாக்ஷாத்காரமுண்டாகும்" என்னும் பதஞ்சலி சூத்திரத்தின்படி (36) ஸோஹம் பாவனை செய்துவரின் சித்தம் ரஜோகுணதமோகுணங்களினின்றும் நீங்கிச்சுத்தமாய், சத்துவகுணத்தின் மேலீட்டால் சாந்தஸ்வரூபமாகும். சாந்தசித்தமே வாஸனாரகித சித்தமாம். வாஸனையாவது முன்பின் ஸந்தர்ப்பமின்றியே திடீரென்று உற்பத்தியாகும் தம்பம், தர்ப்பம் முதலிய சித்த விருத்திகளுக்குக் காரணமாகிய ஸம்ஸ்கார விசேஷமாம். அவை சுபம், அசுபமென இரண்டு வகைப்

படும். ஆத்மானாத்ம விவேகத்தாலுண்டான அகங்கார மின்மை, தம்பமின்மை முதலிய சுபவாஸனைகளால் அவிவேகத்தாலுண்டான தம்பம், அகங்காரம் முதலிய அசுப வாசனைகள் ஒழிகின்றன. இங்ஙனம் அசுபவாசனைகள் ஒழிந்து சுபவாசனைகள் நிறைந்துள்ள அவஸ்தையே சித்தத்தின் ஸத்துவபரிணாமமாம். தம்பம், தர்ப்பம் முதலிய அசுபவாஸனைகளின் நீக்கமே வாஸனாக்ஷய மெனப்படும். ஆத்ம விசாரத்திற்குப் பிரதிகூலமான விருத்திகளை யுண்டாக்கும் அசுப ஸம்ஸ்காரங்களின் நீக்கமாகிய வாஸனாக்ஷயமே மனோநாசமெனப்படும். மனம் வாஸனாவடிவமாதலின். "எது வரையில் வாஸனாக்ஷயமுண்டாகவில்லையோ, அது வரையில், மனோநாசமுண்டாகவில்லை; எது வரையில் வாஸனாக்ஷய மனோநாசங்களுண்டாகவில்லையோ, அது வரையில் தத்துவஞான முண்டாகவில்லை" என்று ஸ்மிருதிகளில் கேழ்க்கப் படுவதால், தத்துவஞானத்திற்கு வாஸனாக்ஷய மனோநாசங்கள் காரணங்களெனப் பெறப் பட்டது.

அகர்த்தா, அபோக்தாவாகிய ஆத்மஸ்வரூபத்தில் கர்த்ருத்வ போக்த்ருத்வாதி தர்மங்களின் அத்தியாசமே, ஆகாமி, சஞ்சித கர்மங்களின் (37) ஆச்ரயமாம். "அகர்த்தாவும் அபோக்தாவுமாகிய எனக்கு இறந்தகாலம் நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய முக்காலங்களிலும் கர்த்ருத்வாதி தர்மங்கள் கிஞ்சித்தும் இல்லை." யென்னும் நிச்சயமுடைய ஞானிக்குக் கர்ம சம்பந்தம் ஒரு சிறிதுமில்லையாம். "ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुतेऽर्जुन । "ஞானமாகிய தீயால் ஸர்வ கர்மங்களும் நாசமாகின்றன" வென்னும் கீதாவசனம் இதற்குப் பிரமாணமாம். இது (அதாவது கர்மாரஹித்தியம்) ஞானத்தின் பலனாம்.

(சங்கை) **अवश्यमनुभोक्तव्यं कृतं कर्म शुभाशुभम् । प्रारब्धं भोगतो नश्येत् नतु ज्ञानेन नश्यति ।** என்னும் பிரமாணங்களின் படி "செய்யப்பட்ட சுபாசுப கர்மங்களை அவசியம் அநுபவித்தே தீரவேண்டும்" "அனுபவமின்றிக் கர்மாக்களின் நாசமின்று" என்று ஏற்படுவதால் ஞானத்தால் கர்மநாசம் ஒப்புவது கூடாது. ஆதலின் ஞானிகளுக்கும் கர்ம சம்பந்தம் உண்டு.

(சமாதானம்) அங்ஙனமன்று; "அனுபவமின்றிக் கர்மாக்களின் நாசமின்று" என்பது பிரஹ்மஞானமற்ற பாமர ஜீவர்களின் பொருட்டுப் பிரவர்த்தித்த வாக்கியமாகும். ஞானமுண்டாகும் க்ஷணத்திலேயே ஆகாமி சஞ்சிதங்கள் நாசமாகின்றன; பிராரப்தம் மாத்திரம் மிஞ்சுகின்றது. தனுசிலிருந்து விடுபட்ட பாணமானது, வேகம் குறைந்தவுடனே எங்ஙனம் கீழே விழுந்துவிடுமோ, அங்ஙனமே, ஞானிகளின் பிராரப்தமும் வேகமுள்ள வரையில் சரீர வடிவாயிருந்து பின்னர் விழுந்து விடுகின்றது. ஞானிகள் பிராரப்தத்தை அனுபவிப்பது இதரர்களுடைய திருஷ்டிக்கே விஷயமாம். ஞானிகள் உலகத்தைத் தக்தபட (எரிந்தவஸ்திர)ம் போல் காண்கின்றார்கள். அவர்களின் பிராரப்தானுபவம் ஆபாஸ மாத்திரமேயாம். இந்த ஶ்லோகத்தில், '**वाचा गुरोः** குரவனுர் வாக்கால்' என்று கூறப்பட்டிருப்பதால் உபதேச மஹாவாக்கியம் தொனிக்கின்றது. சாந்தோக்கிய (ஸாமவேத) உபநிஷத்தின் மஹாவாக்கியமாகும் **तत्त्वमसि** யென்பதுவே உபதேசவாக்கியமாம்.

அதன் விமர்சமாவது:—இந்த வாக்கியம் தத், துவம், அஸி என்னும் மூன்று பதங்களாலாகியது. இவற்றின் ஐக்கியார்த்தமானது **जहदजहल्ल**க்ஷணையால் சித்திக்கின்றது. '**ब्रह्म सत्यं जगन्मिथ्या जीवो ब्रह्मैव नापरः**' பிரஹ்மம் ஒன்றே

ஸத்தியமானது; காணப்படும் இந்த உலகம் மித்தியை; ஜீவன் பிரஹ்மமே; மற்றன்று" என்னும் பரமசித்தாந்தந் தான் உபதேசமஹாவாக்கியத்தின் ஸாரமாகும். இவ்வர்த்தம் இதில் நன்கு பிரதிபாதிக்கப்பட்டுள்ளது அறியத் தக்கது.

## அவதாரிகை.

ஜீவப்பிரஹ்மங்களுக்கு ஐக்கியங் கூறும் பக்ஷத்தில், "நான் பருத்திருக்கிறேன், நான்செவிடன், நான்குருடன், நான் ஊமை," என்னும் அநுபவம் உலகத்தில் பிரசித்தமாயிருத்தலால், "நான்" என்பது ஆத்ம வாசகமாயிருத்தலின், தேகம், பிராணன், புத்தி, முதலியவைகளுக்கு, ஆத்மத்துவம் ஏற்படுகின்றது. ஆதலின் தேகாதிகட்கும் பிரஹ்மத்தோடு ஐக்கியம் சொல்லவேண்டும்." என்று கூறின், அங்ஙனமன்று. என்னுடைய தேகம், என்பிராணன், என் புத்தி என்னும் அனுபவம் யாவருக்கும் இருப்பதால் தேகாதிகட்கு ஆன்மத்தன்மை சித்திப்பதில்லை. உடையவன் உடைமையாகாததனால். மேலும், தேகாதிகள் இதமகார வ்ருத்திக்கு விஷயமாவதால், கடபடாதிகளைப்போல் திருசியப் பொருள்களாம்; திரிசியப் பொருள்கள் ஆத்மாவன்று. ஆதலின், திரிசியங்களான பஞ்சகோசங்களையும் விளக்கிக்கொண்டு நிர்த்தர்மியாய் ஸர்வ ஸாக்ஷியாயிருக்கும் பிரத்தியகான்மாவே "நான்" என்பதன் பொருளாம்.

(இரண்டாவது சங்கை) "அங்ஙனமாயின், நான் பிராஹ்மணன், நான் விவேகி, நான் ஜடன், நான் துக்கி யென்னும் அனுபவமிருப்பதால், நிர்த்தர்மியான ஆத்மாவினிடத்தில் பிராஹ்மணத்துவாதி தர்மங்கள் ஏற்படுகின்

றன. பரஸ்பர விருத்த தர்மங்கள் ஓரதிகரணத்திலிருப்பது (38) வியாகாத மென்னும் தோஷமுடையதாகின்றது." என்று கூறின், அங்ஙனமன்று. நிர்த்தர்மியான ஆத்மாவினிடத்தில் அன்னமயாதி பஞ்சகோசங்களின் தர்மங்களான பிராஹ்மணத்துவம், துக்கித்துவம் முதலியவை தோன்றுவது (39) அத்தியாசத்தினுலேயாம். சிகப்புப் புஷ்பத்தின் சம்பந்தத்தினுல் உண்மையில் வெண்மையான ஸ்படிகம் செம்மை நிறமாகக் காணப்படுவதுபோல.

(மூன்ருவது சங்கை) அங்ஙனமாயின், "ஆத்மா அஹம் வ்ருத்திக்கு விஷயமாவதால் ஆத்மவிளக்கம் அஹம் வ்ருத்தியா லேற்படுவதாகின்றது. ஆகவே, ஆத்மா ஸ்வப்பிரகாசம் என்பதற்கு விரோதமாகின்றது." என்றுகூறின், அங்ஙனமன்று. ஆத்மாஸ்வப்பிரகாசமேயாகும். (40) அந்தக்கரண வ்ருத்தியாகிய அஹம் வ்ருத்தியால் ஆத்மா விளக்கப்படுவதல்ல. ஏனெனின், விருத்தியின் பலன் ஆவரண பங்கம் மாத்திரமே யென்பது சுருதி, யுக்தி, வித்வான்களுடைய அனுபவங்களுக்கியைந்தவிஷயமாம். ஆத்மாவை ஆஶ்ரயித்திரானின்ற கற்பித ஆவரணம், (41) அகண்டாகார விருத்தியால் கெடுக்கப்பட்டபோது, ஸ்வயம் பிரகாசமாகிய ஆத்மா தானேதானுய் விளங்குகின்றது. குடத்திற்குள் வைக்கப்பட்ட தீபமானது குடம் உடைக்கப்பட்டபோது தானே பிரகாசிப்பதுபோல. ஆதலின், ஒவ்வொரு ஜீவனிடத்திலுமுள்ள பிரத்தியகான்மாவானது அந்தக்கரணம், இந்திரியங்கள் முதலியவைகளையும், அவற்றின் மூலமாய் ஸகலதிருசியப் பொருள்களையும் விளக்கிக் கொண்டு, தான் அவற்றிற் கெல்லாம் அதீதமாய் தானேதானுய் விளங்கிக்கொண்டிருக்கின்றது என்பதை ஆசாரிய ஸ்வாமிகள் இக்கவியில் நன்கு கூறுகின்ருர்.

சிற்சொருபத்தாற் சித்தமிந்தியங்களோ
டிச்சகம் விளங்குமாமென்று வற்புறுத்துதல்.

या तिर्यङ्नरदेवताभिरहमित्यन्तः स्फुटा गृह्यते
यद्भासा हृदयाक्षदेहविषया भान्ति स्वतोऽचेतनाः ।
तां भास्यैः पिहितार्कमण्डलनिभां स्फूर्तिं सदा भावय-
न्योगी निर्वृतमानसो हि गुरुरित्येषा मनीषा मम ॥ ४ ॥

விருத்தம்.

(4) எந்தவோர் சித்தை யானெனவமர
ரிலங்குபுள் நரர் அறிவாரோ
அந்தச்சித் தொளியாற் சடமனங் கரண
மாக்கையுஞ் சித்தென விளங்கும்
வந்தமே கமதால் மறைபடும் ரவிபோல்
மனத்தினுல் மறைந்த வச்சித்தைச்
சந்ததம் யானென் சாந்தமார் யோகி
சற்குருவென் கருத்திதுவே.

(இதன் பொருள்) பசுபக்ஷி முதலிய ஜெந்துக்களா லும், மனிதர்களாலும், தேவர்களாலும் நான் நான் என்று பிரத்தியக்ஷமாய் அனுபவிக்கப்பட்டதாய், தேகாதிகளைக் காட்டிலும் வேறாக ஸ்வயம் பிரகாசமாய் விளங்கிக்கொண் டிருப்பதான யாதொரு ஆத்மஸ்வரூபமுண்டோ, யாதொரு சின்மாத்திர ஸ்வரூபத்தால் மனம், இந்திரியம், தேகம் முதலிய ஜடவிஷயங்கள் பிரகாசிக்கின்றனவோ, சூரிய ஞல் பிரகாசிப்பிக்கப்படுவதான மேகத்தால் மறைக்கப் பட்ட சூரியமண்டலத்தைப் போலுள்ளதான அந்தஸ்கய

சொப்பிரகாச சொரூபத்தைச் சதா அநுசந்தானம் செய்யும் யோகி மறையோனாகுக; சண்டாளனாகுக. அவனே எனது சற்குரு. இதுவே எனது நிச்சயம்.

(விருத்தியுரை) புண்ணியம், பாவம் மிஸ்ரம் என்னும் மூவித கர்ம பலன்களாக முறையே கிடைத்த தேவ (இந்திராதி) திர்யக், (பசு, பக்ஷி, மிருகாதி) நர (மனித) சரீரங்களைக்கொண்ட சகலஜீவர்களின் ஹிருதயாகாசத்தின் கண்ணுமிருந்து "நான் நான்" என்னும் அஹம்விர்த்திக்கு விஷயமாய், ஸர்வஸாக்ஷியாய், சொப்பிரகாச சிதேகரஸமாய் விளங்குவது ஆன்மாவாம். இத்தகைய சித்ஸ்வரூப ஆத்மப் பிரகாசத்தால், ஜடங்களான அந்தக்கரணம், இந்திரியங்கள், தேகம், சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தாதி விஷயங்கள் முதலிய யாவும் விளங்குகின்றன. तस्य भासा सर्वमिदं विभाति "சிதேகரஸ ஆத்மப் பிரகாசத்தினாலேயே திருசியமாகிய யாவும் விளங்குகின்றன" என்னும் சுருதி இதற்குப் பிரமாணமாம்.

சங்கை. ஆத்மா வியாபகப் பொருளாயிருக்க, அது சகல ஜீவர்களின் அந்தக்கரணத்துக்குள் விளங்குகின்றது என்பது எங்ஙனம் பொருந்தும்?

சமாதானம். ஆத்மா ஸர்வவியாபியாயிருப்பதால், தேகேந்திரிய விஷயாதி சகல திரிசியப்பொருள்களைக் காட்டிலும், அந்தக்கரணம், சத்துவ குணமிகுதியால் அதிக ஸ்வச்சப்பொருளாயிருத்தலின், சுத்தமாகிய கண்ணாடியில் முகம் நன்கு பிரதிபிம்பிப்பதுபோல, அந்தக்கரணத்தில் ஆன்ம விளக்கம் நன்கு ஏற்படுகின்றது. இதனால் ஆத்மாவின் வியாபகத் தன்மைக்கு யாதொரு ஹானியும் உண்டாகிறதில்லை.

இரண்டாவது சங்கை. அங்ஙனமாயின், எல்லா ஜீவர்களுக்கும் "நான் நான்" என்னும் அனுபவம் இருப்பது பிரசித்தம்; 'நான்', என்பதோ ஆத்மாவாம். ஆதலின் யாவரும் ஏன் முக்தர்களாகமாட்டார்கள்?

சமாதானம்:—அங்ஙனமன்று. எங்ஙனம் சூரியனால் பிரகாசிப்பிக்கப்பட்ட மேகங்கள் சூரியனையே மறைக்கின்றனவோ வங்ஙனமே, ஆத்மப் பிரகாசத்தால் விளங்கும் பஞ்சகோசங்களும் சொப்பிரகாச வடிவ ஆத்மாவின் உண்மை வடிவத்தை(நன்கு விளங்காமல்)மறைக்கின்றன. எந்த ஜீவனானவன் ஸகல விஷயங்களினின்றும் திரும்பப்பட்ட சித்தமுடையவனாய்ப் பூர்வஜன்மஸுக்ருதத்தினாலும், ஈசுவரப் பிரஸாதத்தினாலும் கிடைத்த ஸத்குருவால் (42) "தத்துவமஸி" என்று உபதேசிக்கப்பெற்று "அஹம்பிரஹ்மாஸ்மி" என்று சந்தேக விபரீதங்களறத்தன் உண்மை நிலையை அபரோக்ஷமாய் அறிகின்றானோ, அவனுடைய அஞ்ஞானமானது இரவியைக்கண்ட இருள்போல் ஒழிகின்றது. அவனே முக்தனாகின்றான். மற்றவனல்லன்; ஜீவத் தன்மைக்கு உபாதியாகிய அந்தக் கரணங்கள் பல வாதலால்.

(43) "நித்திய ஸித்த, அபரோக்ஷ, ஸ்வப்பிரகாச, அத்வயாநந்தகன ஆத்மாவே நான்" என்று எப்பொழுதும் இடைவிடாமல் அநுசந்தானம் செய்யும் பரம யோகியே யாவராலும் பூஜிக்கத்தக்கவன். அவனே எனது பரம குருவாவன். இதுவே எனது திட நிச்சயமாகும். இந்த ச்லோகம் "अयमात्मा ब्रह्म—அயமாத்மா பிரஹ்ம" வென்னும் அதர்வண வேதமஹாவாக்கியத்தின் அர்த்தத்தை நிரூபிக்கின்றது. இது நிதித்யாஸன வாக்கியமாகும். निर्वृत-

**मानसः** என்னும் பதம் நிதித்தியாஸனம் செய்யும் யோகியைக் குறிக்கின்றது. அஹந்தாஸ்புரணத்தால் **अयमात्मा** வென்பதும், ஸ்வப்பிரகாசஸ்வரூப மென்பதால் **ब्रह्म** என்பதும் குறிப்பிடப்பட்டுள்ளன; இது நுட்பமாய் அறியத் தக்கது.

(அவதாரிகை) லௌகிகவிஷயசுகங்களை அநுபவித்துக் கொண்டிருக்கும் பாமர சாதாரண ஜனங்களைக் காட்டிலும் ஜீவப்பிரஹ்மைக்கிய ஸ்வாநுபவமுடைய யோகி எங்ஙனம் சிரேஷ்டன்? என்றாசங்கித்துப் பிரஹ்மநிஷ்டயோகியானவன் ஒப்பு உவமைகளற்ற(நிரதிசய)ஆநந்த ஸ்வரூபனுயிருத்தலாலும், பிரஹ்மத்தைத் தன் வடிவாயறிந்ததனால் தான் பிரஹ்மமேயானதனாலும், துரும்பு முதல் பிரமனீறாகவுள்ள ஸகலப் பிராணிகளைக் காட்டிலும் சிரேஷ்டமானவனென்பதை இக்கவியிற் கூறுகின்றார்.

பிரஹ்மமறிந்தவன் பிரஹ்மமே யாமெனல்.

**यत्सौख्याम्बुधिलेशलेशत इमे शक्रादयो निर्वृताः**
**यच्चित्ते नितरां प्रशान्तकलने लब्ध्वा मुनिर्निर्वृतः ।**
**यस्मिन्नित्यसुखाम्बुधौ गलितधीर्ब्रह्मैव न ब्रह्मवित्**
**यः कश्चित्स सुरेन्द्रवन्दितपदो नूनं मनीषा मम ॥ ५ ॥**

விருத்தம்.

(5) எந்தவா நந்தக் கடலின் லேச சத்தா
விமையவ ரின்ப முற்றுள்ளார்
எந்தவா நந்த முளத்தினிற் கண்டே
யெழின்முனி யின்புரு வானூர்

அந்தவா நந்த நித்தியக் கடலி
லழுந்தியோன் பிரமமே; வித்தன்
றந்தவிந் திரனு தியர் பணிந் தேத்து
மவன் குருவென் கருத்திதுவே.

(இதன் பொருள்) எந்த ஒரு பேராநந்தக் கடலின் இலேசத்தால் இந்திரனுதியர் தத்தம் பதங்களின் சுகத்தை யனுபவித்துக் கொண்டிருக்கின்றுர்களோ, எந்த ஒரு நிரதிசயாநந்தகனத்தை ஸகல விருத்திகளு மற்ற (45) உபசாந்த சித்தத்தில் அநுசந்தானஞ்செய்து, (46) மனனசீலர்களாகிய முனிகள் பேராநந்த மடைகிறுர்களோ அப்படிப்பட்ட அழிவற்ற சுகவாரியில் மூழ்கின சித்தத்தை யுடைய பிரஹ்மவித்துக்கள் பிரஹ்மமே யாகின்றனர். தனக்குப் பின்னமாகப் பிரஹ்மத்தைக் கண்டவர்களல்லர். அப்படிப்பட்ட தன்மையுடைய முத்தர்கள் தேவேந்திரனும் பூஜிக்கப்படுபவராகின்றுர்கள். இது சத்தியம். இதுவே யெனது தேர்ந்த அபிப்பிராயம்.

(விருத்தியுரை) (யாவராலும் சிரேஷ்டமென விரும்பத்தக்க) (47) இந்திரன் முதலிய தேவர்களின் ஐஶ்வர்யமானது பிரஹ்மாநந்தக்கடலின் இலேசத்திலும் இலேசமாம். இலேசமென்பது பரமாணுவாம். முதலிய என்னும் பதத்தால் பிரஹஸ்பதி, பிரஜாபதி, நான்முகப்பிரமன் இவர்களின் ஆநந்தங்களைக் கொள்ளக் கடவது. விஷயாநந்தமானது மனிதர்கள், மனுஷ்ய கந்தர்வர்கள், (ஸார்வபௌமன் அல்லது சக்கிரவர்த்தி)கந்தர்வர்கள், தேவகந்தர்வர்கள், பித்ருக்கள், ஆஜான தேவர், கர்மதேவர், இந்திரன் பிரஹஸ்பதி,பிரஜாபதி,(48) பிரமன் என்னும் இவர்களால் அனுபவிக்கப்படுபவையான பதினெரு விதமாம். இவற்

றுள், முன் முன் ஆநந்தமானது பின் பின் ஆநந்தத்தைக் காட்டிலும் நூறு மடங்கு குறைவாகும்; மனுஷ்யாநந்தம் ஸார்வபௌமனது ஆநந்தத்தினும் நூறுமடங்கு குறைவாம்.

இங்ஙனம் ஸர்வோத்கிருஷ்டமாகிய சதுர்முகப் பிரஹ்மாவின் ஆநந்தமானது சத்திய சிதேகரஸ பிரஹ்மாநந்தக்கடலின் லேசத்தினும் லேசமாம். அநித்தியமாதலின்; வ்ருத்தி ஜன்னியமாதலின்; ஸாபேக்ஷிகமாதலின். இத்தகைய அநித்திய ஆநந்தங்களை முமுக்ஷுக்கள் இச்சிப்பதில்லை. ஆனல், அவர்கள் ஸகல வாஸனைகளுமற்ற சுத்த சித்தத்தினல் எப்பொழுதும் நித்தியாநந்த ஸ்வரூப பிரஹ்மத்தையே அநுசந்தானம் செய்துகொண்டு நிரங்குசத் திருப்தி யோடிருக்கின்றார்கள்.

இங்ஙனம் அநுசந்தானஞ் செய்வதால் ஸ்வப்பிரகாசஸதாநந்த சிதேகரஸவஸ்துவே ஆய் விடுகின்றார்கள். இத்தகைய ஜீவன் முக்தர்களுக்குப் பயமேயில்லை; இரண்டாவதின்மையால். இத்தகைய அகண்டைகரஸ ஆநந்தகனமாய் விளங்கும் யோகி தேவேந்திராதியரால் எப்பொழுதும் வணங்கப்படுகின்றான்.

முதல் நான்கு ஶ்லோகங்களினுலும் நான்கு மஹாவாக்கியங்களின் அர்த்தமானது பிரதிபாதனம் செய்யப்பட்டு, இந்த ஐந்தாவது ஶ்லோகத்தால் பிரஹ்மவித்தின் அதாவது, ஜீவன் முக்தரின் மகிமை கூறப்பட்டது. இத்தகைய பிரஹ்மஸ்வரூபமே எனது (49) பரமேஷ்டி குரு; இதுவே எனது சித்தாந்தமாம். (எ—று)

## முடிவுரை.

இங்ஙனம் பூஜ்ய ஸ்ரீசங்கர பகவத்பாதர் சண்டாள வேடந் தரித்துவந்த ஸ்ரீ விஸ்வேஸ்வரரை நோக்கித் திருவாய் மலர்ந்தருளினார். இதனால், "வருணாச்சிரமாதி அபிமானம் கேவல அத்தியாசமேயாம்; பாரமார்த்திக தசையிற் கொள்ளற் பாலதன்றாம்; பரமார்த்தத்தை யுணர்ந்து, காணப்படும் உலகைப் பிரஹ்மாகாரமாகவே அறியும் ஜீவன் முத்தர்கள் எவ்வருணத்தாராயினும், எவ்வாச்சிரமிகளாயினும், அவர்களே யாவராலும் பூஜிக்கத்தக்க குரவர்களாம்." என்பது ஆசாரிய சுவாமிகளின் சிதையாத (50) சித்தாந்தமாமென்பது பெறப்படுகின்றது. இக்கருத்தே இச்சிறு நூலால் நன்கு விளங்குகின்றது.

ஸ்ரீ மநீஷா பஞ்சகமும், இலகுவிவரண மென்னும்
விருத்தியுரையும்
முற்றிற்று
சுபம்

---

## வாழ்த்து

கலி விருத்தம்.

வாழ்க மாமறை; வாழ்க மறைமுடி;
வாழ்க சூத்திரம்; வாழ்க நற்கீதையும்;
வாழ்க விந்நூலது; வாழ்க வித்தாரணி;
வாழ்க சங்கர சற்குரு வாழ்கவே.

---

உ

# அனுபந்தம்

இந்நூல் மநீஷா பஞ்சக மெனும் பெயரியது. மநீஷை யென்பது புத்திவ்ருத்திகளுள் ஒன்று. பஹிர்முகமாகச் செல்லும் பிராபஞ்சிக விஷயாகாரவ்ருத்திகளை விஷயங்களி னின்றும் நிரோதஞ் செய்து அந்தர்முகப்படுத்தி ஸ்வரூப நிச்சயஞ் செய்யவிடின், அந்த புத்திவ்ருத்திக்கு மநீஷை யென்று பெயர்.

புத்தி வ்ருத்திகள் அறுவகைப்படும். அவையாவன:—

(1) மநீஷை = ஏர்க்கால் போல ஆத்மஸ்வரூபத்திற்கும் புத்திக்கும் சம்பந்தப்பட்டுள்ள ஆத்ம கோசர வ்ருத்தியாம்.

(2) தீ: = தியானத்தில் பிரவர்த்தித்த புத்திவ்ருத்தி.

(3) பிரஞ்ஞை = ஆத்மஸ்வரூபத்தைச் சாஸ்திரார்த்தங்களைக் கொண்டு மனனம் செய்யும் புத்தி வ்ருத்தி.

(4) மதி = ஊகித்து அறியும் வ்ருத்தி.

(5) பிரதிபை = பலவிதமாக வர்ணித்துக் கூறும் கற்பனா புத்தி வ்ருத்தி.

(6) மேதை = அப்பியஸித்த சாஸ்திரார்த்தத்தை மறவாமல் தாரணஞ் செய்யும் வ்ருத்தி.

பஞ்சகம் என்பது ஐந்து பாக்களையுடைய ஒரு நூல். பதிகம் பத்துப் பாக்களையுடையது போல.

"மநீஷா மநீஷா" வென்பதையே மகுடமாகக் கொண்டுள்ள ஐந்து பாக்களையுடையதாதலால், இந்நூலுக்கு மநீஷாபஞ்சகமெனப் பெயரிடப்பட்டது.

இதன் ஆசிரியர், ஸ்ரீ ஜகத்குரு சங்கரபூஜ்ய பகவத்பாதாசாரிய சுவாமிகள். இவர் மலையாள நாட்டில் காலடி என்னும் க்ஷேத்திரத்தில் இன்றைக்குச் சுமார் 2500 வருடங்களுக்கு முன் சிவகுரு, ஆர்யாம்பாள் என்பவர்களுக்கு ஸ்ரீ மகாதேவன் திருவருளால், சிவாம்சமாய் அவதரித்தவர்.

சங்கரர் என்றால் சுகத்தைச் செய்பவர் என்பது பொருள். இவர் வைதிக சித்தாந்தமாகிய அத்வைதத்தை ஸ்தாபிப்பதற்காக அவைதிகமதங்களைக் கண்டனஞ் செய்து, உபநிஷத்து, பிரஹ்மஸூத்திரம், கீதை என்னும் பிரஸ்தானத்திரயங்களுக்கும் பாஷ்யஞ் செய்து, தசசுலோகி, நிர்வாணஷட்கம், ஆத்மபோதம், சிவமஹிம்னம், அபரோக்ஷானுபூதி, கௌபீனபஞ்சகம், மநீஷாபஞ்சகம், ஸாதனபஞ்சகம், விவேகசூடாமணி முதலிய அனேக அத்வைதப் பிரகரணங்களையுமியற்றி யருளினர்.

இவற்றுள் மநீஷாபஞ்சகமாகிய விந்நூலில் ஜீவப்பிரஹ்மைக்கிய நிரூபணமும், ஜீவன் முக்தர்களின் மகிமையின் வர்ணனமும் நன்கு விமர்சிக்கப்பட்டுள்ளன.

இந்நூலில் (1) (2) முதலிய எண்குறிப்பிட்டவைகளின் விளக்கமாவன :—

(1) நிஷேகம் முதல் நாற்பது ஸம்ஸ்காரங்களாவன :— (ஸம்ஸ்காரம் = மந்திரத்தோடு கூடிய சடங்கு.) (1) ஒரு ஜீவனுடைய சரீரோத்பத்திக்குக் காரணமாகிய தாய் தந்தையரின் சேர்க்கை அதாவது நிஷேகம். (2) பும்ஸவனம்

(3) ஸீமந்தம் (4) உந்நயனம் (5) ஜாதகர்மம் (6) நாமகரணம் (7) அந்நப்பிராசனம் (8) கர்ணவேதை (காதுகுத்துதல்) (9) அப்தபூர்த்தி (ஆண்டு நிறைவு) (10) சௌளம் (குடுமிவைத்தல்) (11) அக்ஷராப்பியாஸம் (12) உபநயனம் (13) அத்யாயோபாகர்மம் (14) அத்யாயோத்ஸர்ஜனம் (15) பிரஹ்மசர்யவிரதம் (16) நியமாத்யயனம் (17) குருகுலவாஸம் (18) அத்யயன ஸமாப்தி (19) பிராஜாபத்யவ்ரத உபக்ரமம் (20) ஷை விரத உத்ஸர்ஜனம் (21) ஸௌம்ய விரத உபக்ரமம் (22) ஷை விரத உத்ஸர்ஜனம் (23) ஆக்னேயவிரத உபக்ரமம் (24) ஷை விரத உத்ஸர்ஜனம் (25) வைஶ்வதேவவிரத உபக்ரமம் (26) ஷை விரத உத்ஸர்ஜனம் (27) ஸமாவர்த்தனம் அல்லது ஸ்நாதகம் (28) வரப்பிரேக்ஷணை (29) பாணிக்கிரஹணம் (30) வதூக் கிரஹப் பிரவேசம் (31) பிரவேச ஹோமம் (32) சேஷ ஹோமம் (33) பிரஹ்ம யக்ஞம் (34) தேவ யக்ஞம் (35) பிதுர்யக்ஞம் (36) மனுஷ்ய யக்ஞம் (37) பூத யக்ஞம் (வைஶ்வதேவம்) (38) அக்னி யாதானம் (39) தர்சபூர்ணமாஸம் முதல் அக்னிஷ்டோமம் வரையிலுள்ள யாகங்கள் (40) அந்தியேஷ்டி (மரணாந்தரம் செய்யப்படும் கர்மா).

(2) நித்திய நைமித்திகங்களாவன :—

நித்திய கர்மா. எந்தக் கர்மத்தைச் செய்யாததனால் பாவமுண்டாகின்றதோ, எதைச் செய்வதால் புண்ணியமுண்டாகிறதில்லையோ, எது எப்போதும் தவறாது செய்யும்படி சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கின்றதோ அது நித்திய கர்மாவாம்.

(உதாரணம்) ஸ்நானம், ஸந்தியாவந்தனம் முதலியன.

நைமித்திக கர்மா. எந்தக்கர்மத்தைச் செய்யாத தனுல் பாவமுண்டாகின்றதோ, எதைச்செய்வதனுல் புண் ணியரூபபலன் உண்டாகின்றதில்லையோ, எது எப்போ தும் செய்யவேண்டுமென்று விதிக்கப்படாது ஒரு நிமித் தத்தைக் கொண்டு விதிக்கப்பட்டிருக்கின்றதோ அது நைமித்திகமாம். (உதாரணம்) கிரஹணம், அமாவாசை முதலிய குறிப்பிட்ட காலங்களில் விதிக்கப்பட்ட தர்ப் பணம், சிராத்தம், தானம், பூஜை முதலியன.

கிருச்சிர சாந்திராயணங்களாவன :—

கிருச்சிரம், சாந்திராயணம் என்பன விரதங்களாம். இவை பாப நிவர்த்திக்காகச் செய்யப்படும் பிராயச்சித்தங் களென்று கூறப்படும். இவை இரண்டும் காய சோஷணங் களேயாகும்.

கிருச்சிரம் நான்கு வகையாம். அவை, பிராஜாபத்திய கிருச்சிரம், தப்த கிருச்சிரம், கிருச்சிராதி கிருச்சிரம் ஸாந்தபன கிருச்சிரம் என்பவையாம். கிருச்சிரம் 12 நாளை க்கு அநுஷ்டிக்கப்படும் ஒரு விரதமாம்.

பிராஜாபத்திய கிருச்சிரமாவது :—3 நாள் காலையில் சாப்பிட்டு மற்றக் காலங்களில் ஆகார மின்றியிருப்பது ; 3 நாள் மாலையில் சாப்பிடுவது; 3நாள், தான் ஆகாரம் வேண் டாது யாரேனும் கொடுத்தால், உண்பது ; மற்ற 3 நாள் ஆஹாரமேயின்றி யிருப்பது. ஆக பன்னிரண்டு நாட்கள்.

தப்த கிருச்சிரமாவது:—3 நாள், காய்ச்சிய உஷ்ணஜலத் தை 6பலம் சாப்பிட்டு இருத்தல் ; 3 நாள், காய்ச்சிய பாலை

3 பலம் சாப்பிட்டு இருத்தல்; 3 நாள், காய்ச்சிய நெய்யை 1 பலம் சாப்பிட்டு இருத்தல்; மற்ற 3 நாள் வாயு பக்ஷணஞ்செய்து இருத்தல். ஆக பன்னிரண்டு நாட்கள்.

கிருச்சிராதி கிருச்சிரமாவது:—மேற் கூறிய தப்தகிருச்சிரத்தை இரண்டு முறை அநுஷ்டிப்பது. அஃதெங்ஙனமெனின், தப்த கிருச்சிரத்திற் கூறியபடி உஷ்ணஜலம் 3 நாள், காய்ச்சின பால் 3 நாள், காய்சின நெய் 3 நாள், வாயுபட்சணம் 3நாள், மறுபடியும் காய்ச்சின நெய் 3 நாள், காய்ச்சின பால் 3 நாள், காய்ச்சிய ஜலம் 3 நாள் ஆக இருபத்தொரு நாள் அநுஷ்டிப்பது.

ஸாந்தபன கிருச்சிரமாவது:—கோமூத்திரம், கோமயம், பால், தயிர், நெய், குசோதகம், (தர்ப்பையை ஜலத்தில் நனைத்து நுனிகளின் மூலமாய்ச் சொட்டும் ஜலம்) இவைகளை முறையே ஒவ்வொன்றையும் ஒவ்வொரு நாள் உட்கொண்டு மறுநாள் பட்டினியிருப்பது. இதுவும் பன்னிரண்டு நாட்கள் அநுஷ்டிக்க வேண்டிய விரதமாம்.

சாந்திராயணம்:—ஐந்து வகையாம்: அவை பிபீலிகாமத்தியம், இயமமத்தியம், ரிஷி சாந்திராயணம், சிசுசாந்திராயணம் யதிசாந்திராயணம் என்பனவாம். சாந்திராயண விரதம் ஒருமாதம் (இரண்டுபக்ஷம்) அனுஷ்டிப்பதாம்.

பிபீலிகாமத்தியமாவது :— கிருஷ்ணபக்ஷப் பிரதமை முதல் துவக்கிப் பௌர்ணமியோடு முடிக்கப்படுவதாம். முதல் நாள் (கிருஷ்ணபக்ஷப் பிரதமையன்று) 14 கவள அந்நமும், மறுநாள் 13 கவளமும், இங்ஙனம் ஒவ்வொரு நாளைக்கு ஒவ்வொரு கவளம் குறைத்துக்கொண்டே வந்து

அமாவாசையன்று உபவாஸமிருந்து, மறுநாள் சுக்கில பக்ஷப்பிரதமை முதல் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கவளமாய் அதிகப்படுத்திப் பௌர்ணமியன்று 15 கவளங்கள் சாப்பிடுவதாம்.

இயமமத்தியமாவது:—சுக்கிலபக்ஷப் பிரதமை முதல் துவக்கி அமாவாசையோடு முடிக்கப்படுவதாம். முதல் பக்ஷத்தில் (பாகத்தில்) ஆஹாரகவளங்களை விருத்தி செய்துக் கொண்டுவந்து பிற்பகுதியில் ஆஹார கவளங்களைக் குறைதுக்கொண்டே வருவதாம்.

ரிஷிசாந்திராயணமாவது:—பிரதி தினம் மும்மூன்று கவளங்கள் வீதம் ஒரு மாதம் சாப்பிட்டு வருவது.

சிசுசாந்திராயணமாவது — ஒவ்வொருநாளிலும் காலையில் 4 கவளமும் மாலையில் 4 கவளமும் சாப்பிட்டு ஒரு மாதம் விரதமிருப்பது.

யதிசாந்திராயணமாவது —உச்சிவேளையில் தினம் ஒன்றுக்கு 8 கவளங்கள் வீதம் ஒரு மாதம் சாப்பிட்டு விரதமிருப்பது.

குறிப்பு:— இவற்றின் விசேஷ நிரூபணத்தைத் தரும சாஸ்திரங்களில் காண்க.

(3) சந்தேக விபரீதங்களாவன :—

கட்டையைப் பார்த்து இது கட்டையா, மனிதனோ வென்று ஏற்படும் இருவகைப்பட்ட எண்ணம் சந்தேகமாம். கட்டையைக்கண்டு கள்வனென்று நிச்சயிக்கும் எண்ணம் விபரீதமாம். இதற்கே மயக்க மென்றும் பிராந்தி யென்றும் பெயர்.

(4) சாந்தி தாந்தி முதலியவையாவன:—

மனத்தை விஷயங்களினின்று தடுத்தலே சாந்தியாம். இதனையே சமமென்றுங் கூறுவர். இந்திரியங்களை விஷயங்களிற் செல்லவிடாமல் தடுப்பதைத் தாந்தி யல்லது தமமென்பர்.

(5) பரமஹம்ஸ ஆஶ்ரமி:—ஒரு வகை ஸன்னியாஸி. ஸன்யாஸம் நான்கு வகைப்படும். அவை குடீசகம், பஹூதகம், ஹம்ஸம், பரமஹம்ஸம் என்பனவாம். இந்த நான்குவகை ஸன்யாஸிகளுள் பரமஹம்ஸ ஸன்யாசியே யாவரிலும் மேம்பட்டவன். ஸன்னியாஸ ஆச்ரமங்களின் விசேஷலக்ஷணம் ஸூதஸம்ஹிதையில் பரக்கக் காணலாம்.

(6) பாஷியகாரர்:—உபநிஷத்துக்கள், பிரஹ்மஸூத்திரம், கீதை என்னும் பிரஸ்தானத்ரயங்களுக்கு வைதிகமாகிய அத்வைதபாஷ்யம் இயற்றியவர். (ஸ்ரீசங்கராசாரியர்).

(7) ஆநந்தவனம்:—பரதகண்டத்தின் ஒரு பாகமாகிய ஆர்யாவர்த்தமென்னும் நாடு (விந்தியமலைக்கு வடக்கு, இமயமலைக்குத் தெற்கு) ஞானவைராக்கிய பூமியெனப்படும். இங்கே தான் இப்பொழுதும் அனேக ஞானிகள் வசிக்கிறார்கள். இந்த ஆர்யாவர்த்த நாடு நைமிசவனம், பதரிவனம், காமிகவனம், துவைதவனம், மதுவனம், ஆநந்தவனம் முதலிய பலவித வனங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. இவற்றுள் ஆநந்தவனமானது காசி க்ஷேத்திரமும், அதற்கடுத்த பூமியுமாம்; இக்காசிக்கே மஹாஶ்மசானமென்றும் வேறொரு பெயருண்டு.

(8) பிரதிபிம்பம் :—கண்ணாடியில் தோன்றும் முகத்திற்குப் பிரதிபிம்பமென்று பெயர்: கண்ணாடியில் முகமிருப்பதாகத் தோன்றுவது மயக்கமேயாம். கண்ணாடியைப் பார்க்கும் ஒருவனது நேத்திரவ்ருத்தி கண்ணாடியால் தடுக்கபட்டு எதிர்முகமாய்த்திரும்பித் தன் முகத்தையே பார்க்கின்றது. கண்ணாடியில் பிரதிபிம்பமுகம் முக்காலத்திலுமில்லை. இது பிம்பப்பிரதிபிம்பபக்ஷத்தில் விவரணாசாரியாது மதமாம்.

(9) கயிற்றரவு :—ரஜ்ஜுஸர்ப்பம்; இது விவர்த்தபக்ஷதிருஷ்டாந்தமாம். அதிஷ்டானத்திற்கு (கயிற்றிற்கு) விபரீத சுபாவமுடைய வேற்றுச்சொரூபம் (பாம்பு) விவர்த்தமெனப்படும்.

(10) சங்கரர் :—சுகத்தைச் செய்பவர்.

(11) விஶ்வேஶ்வரர் : — ஜகத்காரணர். ஈஶ்வரன்; மாயாவிசிஷ்ட சேதனம்.

(12) விகாரம் :—உபாதான காரணத்திற்கு (பாலுக்கு) ச்சமான ஸத்தையையுடைய வேற்றுச் சொரூபம் (தயிர்) விகாரம் அல்லது பரிணாம மெனப்படும்.

(13) நிஷ்காம கர்மம் :—பலனை விரும்பாது ஈஶ்வரார்ப்பணமாகச் செய்யப்படும் வேதவிகித கர்மாக்கள்.

(14) ஸஹஜாநந்தம் :—இயற்கையாநந்தமென்பதாம்.

(15) சாக்ஷி :—அந்தக்கரணத்தையுபாதியாகவுடைய சேதனம் சாட்சியெனப்படும். இதற்கு அந்தக்கரணம் முதலியவற்றின் தர்மங்களோடு தாதாத்மியாத்தியாசமில்லை.

(16) பிரத்யகாத்மா :—அவஸ்தாத்திரய ஸாக்ஷியாயும், பஞ்சகோசவிலக்ஷணமாயும், தஹராகாசத்தில் அஹம்பத லக்ஷ்யமாயும் விளங்கும் ஸ்வயம்பிரகாசசேதனம்.

(17) சொரூப லக்ஷணம் :—சொரூபமே லக்ஷணமாகவுடையதாம்.

(18) தேச, கால, வஸ்து பரிச்சேதங்கள் :—ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திலிராமை தேசபரிச்சேதமாம்.

ஒருகாலத்தில் தோன்றி மற்றொருகாலத்தில் அழிவது காலபரிச்சேதமாம். பின்னபின்னமாய்ப் பல பொருள்களினுண்மை வஸ்துபரிச்சேதமாம். இம்மூன்றுவித பரிச்சேதங்களுமற்றது பிரஹ்மம். வியாபகத்தன்மையால்; நித்தியத் தன்மையால்; எல்லாந் தானான தன்மையால்.

(19) அவச்சேதபக்ஷம் : —அகண்டமாயுள்ள ஒரு ஸமுத்திரத்தில் வளையம்போன்ற ஒரு சுவர் கட்டப்படுமேயாயின், அவ்வளைந்த சுவற்றுக்குள் இருக்கும் பாகம் கிணறு என்று கூறப்படுவது வழக்கம். ஆதலின் சுவறு கிணற்றுக்கு அவச்சேதகமாம்.

(20) வியாபகம் : —ஒரு எல்லைக்குள் அடங்காது எங்கும் வியாபித்திருப்பதாம். தேசபரிச்சேதமின்மையே வியாபகமாகும்.

(21) உபாதி :—வஸ்துவின் ஸ்வரூபத்தில் பிரவேசியாமல் வேறாக நின்று, அதைப் பிறபொருள்களினின்றும் வேறுபடுத்தி யறிவிப்பது; எங்ஙனமெனின், கடாகாசம். இதில் கடம் உபாதி. இந்த கடம் ஆகாசத்தின் ஸ்வரூபத்தில் பிரவேசிக்காமலே வேறாக நின்று, மடாகாசம், மஹாகாசம் முதலியவற்றினின்றும் வேறுபடுத்தி யறிவிக்கின்றது.

(22) பாரமார்த்திக சத்தியம் :—அதாவது எவ்விதத்திலும் பாதிக்கப் படாமலும், ஒருவிதமான உபாதிகளின் சம்பந்தமின்றி விளங்குவதும் பாரமார்த்திக ஸத்தியமாம்.

(23) அத்தியாஸம் :—பிரமம் அல்லது மயக்கமென்று கூறப்படும். இது இரண்டுவகை :—ஸோபாதிகம் ஒன்று; நிருபாதிகம் மற்றொன்று. ரஜ்ஜுஸர்ப்பம் நிருபாதிகாத்தியாஸம். கானல் ஜலம் ஸோபாதிகாத்தியாஸம். சரீர தர்மமாகும் வர்ணாஸ்ரமாத்தியாஸம் ஸோபாதிகமாகும்.

(24) நியாயமாகிய மத்தால் :—உபநிஷத்துக்களிலும், அவற்றை யநுசரித்த சாஸ்திரங்கள் முதலியவற்றிலும் கூறப்பட்டுள்ள அநுகூல யுக்திகளாகிற மத்தால்,

(25) மநீஷாபஞ்சகம்:—"மநீஷா மநீஷா" வென்பதையே மகுடமாகவுடைய ஐந்து பாக்களாலாகிய நூலுக்கு மநீஷா பஞ்சகமென்று பெயர்—"மநீஷை" யென்பது ஆத்மாநுசந்தானத்திற்கு அநுகூலமாகிய புத்திவ்ருத்தியாகும்.

(26) சற்குரு :—முக்காலத்திலும் பாதிக்கப்படாத பாரமார்த்திக ஸத்திய ஸ்வரூபத்தைச் சுருதி யுக்திகளால் சீடனுக்குப் போதித்து அந்நிலையில் அவனைச்சேர்ப்பிப்பவரே சற்குருவாவர்.

(27) ஸம்பிரஸாதம் :—வேறொன்றன் கலப்பின்றித் தானே தானாக விளங்கும் (சுழுத்தி) நிலையாம். இது ஆநந்தமயகோசமாகும்.

(28) அநுவர்த்தனம் :—நீங்காது ஒன்றைப் பின்பற்றுதல்.

(28-i) சாட்சியம் :—சாக்ஷியால் விளக்கப்படுவது.

(29) பிரஹ்மநிஷ்டன் :—வியாபகமான பரப்பிரஹ்ம ஸ்வரூபத்தில் நிலைத்திருப்பவன் (ஸமாதிபரன்).

(30) காரணகுரு :—காணப்படும் நாமரூபவடிவ காரியப் பிரபஞ்சமனைத்தினையும் மித்தையாக்கிக் காரணமான ஸத்ய ஸ்வப்பிரகாச பூர்ண பிரஹ்மத்தை அறிவிப்பவன் காரணகுருவாவன்.

(31) திரிபுடி :—காண்பான், காட்சி, காணப்படும் பொருள்.

(32) இதமாகார வ்ருத்தி :—இதுவென்னும் ஸாமான்யப் பிரத்தியக்ஷஞானத்தை யுண்டுபண்ணும் அந்தக் கரண வ்ருத்தி.

(33) அபரோக்ஷம்:—பிரத்தியக்ஷம், அதாவது எவ்வெவ்விஷயங்களை எவ்வெவ்விந்திரியங்களால் அறியக் கூடுமோ, அவ்வவ்விஷயங்களை அவ்வவ்விந்திரியங்களாலறிவது. ஒரு குடத்தைக் கண்ணாலறிவது போலவும் சப்தத்தைக் காதாலறிவது போலவுமாம்.

(34) ஆத்மகோசரவ்ருத்தி:—ஆத்மாவை அறிவிக்கும் வ்ருத்தி; நாமரூப நாட்டத்தினை யகற்றி அஸ்தி, பாதி, பிரிய வடிவ ஸச்சிதானந்த ஆத்மாவை நாடும் அகண்டாகார வ்ருத்தி.

(35) அதிகாரம் :—உரிமை, தகுதி.

(36) ஸோஹம்பாவனை :—“ அவனே நான் ” என்று பாவிப்பது. பரஸ்பரம் விரோதாம்சங்களான (ஜீவேஶ்வர உபாதிகளைக்) கிஞ்சிக்ஞத்துவ, ஸர்வக்ஞத்துவாதிகளை நீக்கி, விரோதமற்ற சேதனம்சத்தில் ஐக்கியாநுஸந்தானம் செய்தல்.

(37) ஆஶ்ரயம்:—ஆதாரம்: ஒரு கடத்தின் இருப்பிற்குப் பூமி ஆஶ்ரயமாம்.

(38) வியாகாதம்:—முறண்; என்தாய் மலடி; எனக்கு நாக்கில்லை; என்பதுபோல. தன் தாய்க்குப் புத்திரனை தான் இருக்கையில் தாய்க்கு மலடித்தன்மை முறண். எனக்கு நாக்கில்லை யென்பது ஒருவனது வார்த்தை யாதலின் நாக்கின்றிவார்த்தை வாராதாதலின் அது வியாகாதமாம்.

(39) அத்தியாஸம்:—மயக்கம்—பாம்பல்லாத கயிற்றைப் பாம்பாகப் பார்ப்பது—புஷ்பத்தின் செம்மை நிறத்தைச் செம்மைநிறம் முற்றுமில்லாத படிகத்திற் பார்ப்பது; 23 ஐயும் பார்க்க.

(40) அந்தக்கரணவ்ருத்தி:—வியாவகாரிக விஷயங்களைக் கண் முதலிய இந்திரியங்களால் அறியும் வ்ருத்தி. இந்தவ்ருத்தி அந்தக்கரணத்தினின்று கண் காது முதலிய இந்திரியங்களின் மூலமாய் ரூபசப்தாதி விஷயங்களின் மேற்படர்ந்து வ்ருத்தியவச்சின்ன சேதனமும், விஷயாவச்சின்ன சேதனமும், ஒன்றாகி பிரத்யக்ஷஞானமுண்டாகின்றது.

(41) அகண்டாகாரவ்ருத்தி:—ஆத்மகோசர வ்ருத்தி.—(34) ஐப் பார்க்க.

(42) தத்துவமஸி:—இது உபதேச மஹாவாக்கியம்—"அது நீயாயிருக்கிறாய்" என்பது இதன் பொருளாம்—(36) ஐப் பார்க்க.

(43) நித்யஸித்தம்:—எப்பொழுதும் அடையப்பட்டது—தான் கழுத்தில் அணிந்துள்ள முத்தாரம் காணாமற் போய்விட்டதென மயங்கி, அங்குமிங்கும் தேடிப் பின்னர்,

தனக்காப்தையான ஒருவளது வார்த்தையால் பிரமம் நீங்கித் தன்கழுத்திலிருக்கக் கண்டாள்; அம்முத்தாரம் கழுத்தில் மயக்ககாலத்திலுமிருந்தது; தெளிந்த காலத்திலுமிருந்தது; இதுவே நித்தியஸித்தமாம்.

(44) அத்வயாநந்தகனம்:—இரண்டாவதற்ற இன்பமே ஸ்வரூபமாகவுடையது.

(45) உபசாந்தம்:—பிரபஞ்சவிஷயமான எவ்விதவ்ருத்தியுமில்லாதநிலை; வாஸனாக்ஷய, மனோநாச, தத்துவஞானங்களின் ஸமகால அடைவின் ஸ்திதி.

(46) மனனம்:—சிந்தித்தல். சுருதிக்கு அனுகூலமாகிய யுக்திகளைக் கொண்டு ஜீவப்பிரஹ்மைக்கிய அநுசந்தானம் செய்தல்.

(47) இந்திரன்:—சிரேஷ்டமானவன்—தேவராஜன்.

(48) பிரமன்:—நான் முகப் பிரமன், சிருஷ்டிகர்த்தா—கலைமகள் கொழுனன். பிரஜாபதி.

(49) பரமேஷ்டி குரு:—சற்குரு, காரணகுரு, முதலிய குரவர்களுக்கெல்லாம் மேம்பட்டவர்; என்றால், அவர்களாலும் போற்றத்தக்கவர்; ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி.

(50) ஸித்தாந்தம்:—வாதத்தில் எவ்வித சாஸ்திரப் பிரமாணங்களினாலும், யுக்திதர்க்கங்களினாலும் பாதிக்கப் படாமல் வாதிப் பிரதிவாதிகள் இருவர்க்கும் ஸம்மதமாய் முடிந்தவிஷயம்.

அநுபந்தம் முற்றிற்று.



# ஸ்ரீ குஹானந்த மண்டலியின்

ஸ்தாபகர்

பிரஹ்மஸ்ரீ N. சுப்பிரமணிய அய்யர்

இயற்றிய நூல்கள்.

1. ஸ்ரீநகர விமர்சம். (மூலமும் தமிழுரையும்). ஸ்ரீ துர்வாஸ மஹாரஷியாலியற்றப்பட்ட ஸ்ரீலலிதாஸ்தவ ரத்னம். ஸ்ரீ நகரப்படங்களுடன் கூடியது. 0 12 0
2. குரு தத்வ விமர்சம். (தமிழ்) குருவின் மஹிமையை நன்கு விளக்குவது. 0 5 0
3. வரிவஸ்யாரஹஸ்யம். (மூலமும் தமிழ் விரிவுரையும்) இது, உபாஸனையின் ரஹஸ்யத்தையும் ஸ்ரீவித்யா மந்த்ரத்தின் 15 விதமான அர்த்தங்களையும் விரிவாகக் கூறுவது. 1 0 0
4. **श्रीविद्यासपर्यापद्धतिः** ஸ்ரீவித்யாஸபர்யாபத்ததி (நாகர லிபி) ஸ்ரீசக்ர நவாவரண பூஜாவிதானம், ஹோமம், நாமாவளிகள், ஸூக்தங்கள், தேவீ உபநிஷத்துக்கள் முதலியன இதில் அடங்கியுள்ளன. படங்களோடு கூடியது. ஸாதா பைண்டு 2 0 0

   ஒருபக்கம் மாத்திரம் அச்சிடப்பட்டது... 3 0 0

   ஷை காலிகோ பைண்டு ... 3 8 0
5. ஸ்ரீவித்யாஸபர்யாவாஸனை(தமிழ்)ஸ்ரீவித்யா ஸபர்யாபத்ததியின் அத்வைத வியாக்யான ரூபமாயுள்ளது. 3 0 0
6. Sree Vidya Saparya Vasana ...
   (English Translation of the above) 3 0 0

7. லலிதோபாக்யான விமர்ஶம். (தமிழ்) ... 0 4 0

8. ஸுப்ரஹ்மண்ய தத்துவம் (தமிழ்-நாகரம்) 1 8 0

9. श्रीविद्यानित्याह्निकम् । (நாகரம்) இதில் சேர்க்கப்பட்டுள்ள முக்கிய விஷயங்களாவன:—गुरुध्यानं दिव्यमङ्गलाध्यानं रश्मिमाला अजपासमर्पणं स्नानविधिः चतुर्विध संध्याविधिः नाथ-घटिका—तत्व—तिथिनित्या—नाम—मन्त्र—हूर्त पारायणषट्कं लघुपूजा षडाम्नायाः पञ्चदशशक्तिमालाः—त्रैलोक्यमोहनकवचं—आम्नायस्तोत्रं—त्रिपुरास्तवराजः—रश्मिगणनम्. Calico Bound 3 0 0

10. மனீஷா பஞ்சகம். (மூலமும் தமிழ் விருத்தியுரையும்) ஸ்ரீ ஆதிசங்கரரால் இயற்றப்பட்ட அத்வைத பிரகரணம். 0 10 0

ஸ்ரீலலிதாத்ரிஶதீஸ்தோத்திரம். (மூலமும் சந்திரிகை என்னும் தமிழ் விருத்தியுரையும்) ... 1 0 0

ஞானப்பிரகாசம் அல்லது மனோஹாரிணி. (ஒரு சிறந்த வேதாந்த நாடகம்) ... 0 10 0

---

*Copies can be had of:—*

1. Sri Guhananda Mandaly,
   178, Lloyds Road, Royapettah, Madras.
2. Sri Balamanorama Press, Mylapore, Madras.
3. Sri Janardana Printing Works Ltd.,
   Kumbakonam



## BOOKS BY THE SAME AUTHOR

| | | Rs. | As. |
|---|---|---|---|
| | **Tamil** | | |
| 1. | Srividya Saparya Vasana | ... 3 | 0 |
| 2. | Varivasya Rahasyam | ... 1 | 0 |
| 3. | Lalita Trisati Bhashyam | ... 1 | 0 |
| 4. | Srinagara Vimarsam | ... 0 | 12 |
| 5. | Gurutatva Vimarsam | ... 0 | 5 |
| 6. | Maneesha Panchakam | ... 0 | 10 |
| 7. | Gnanaprakasam—A Philosophic Drama | ... 0 | 10 |
| 8. | Lalitopakhyana Vimarsam | ... 0 | 4 |
| 9. | Subrahmanya Tatvam | ... 1 | 8 |
| | **Nagari** | | |
| 10. | Srividya Saparya Paddhati | | |
| | Single-page Edition, Calico-bound | ... 3 | 0 |
| | Double-page ,, Stiff-board bound | ... 2 | 8 |
| 11. | Srividya Nityahnika (Calico-bound) | ... 3 | 0 |
| | **English** | | |
| 12. | Srividya Saparya Vasana | ... 3 | 0 |

*Copies can be had of:—*

1. Sri Guhananda Mandaly,
   178, Lloyds Road, Royapettah, Madras.
2. Sri Balamanorama Press, Mylapore, Madras.
3. Sri Janardana Printing Works Ltd.,
   Kumbakonam